# கல்கி

KALKI 5-9-82 ரூ. 1.20



“அப்பா! சரியான மழையிலே
மாட்டிக்கிட்டேன்!.. இவர்
தான் ஓடி வந்து குடை
பிடிச்சு காப்பாத்தினார்!”

# மின்னலடிக்கும் ஸூப்பர் ரின் வெண்மை...

**...இதர, டிட்டர்ஜென்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சும் வெண்மை.**

பார்வைக்கு தப்பவே தப்பாத வெண்மை உங்கள் துணிகளுக்கு—வேளை தவறாத ஸூப்பர் ரின் சலவையின் வெண்மையே தனி.
இதர டிட்டர்ஜென்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சுவது ஸூப்பர் ரின் வெண்மை.
காரணம், மிகுந்த வெளுக்கும் சக்தி அடங்கியது ஸூப்பர் ரின்.

நீங்களே கண்டுகொள்வீர்கள்

இதை வெளுத்தது வேறுசில டிட்டர்ஜென்ட பார்



இதை வெளுத்தது ஸூப்பர் ரின்




**அதிக வெளுப்பூட்டும் சக்தி படைத்தது ஸூப்பர் ரின்.**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-RIN.35-2012 TM

# ஊருக்குப் போயிருந்தேன்

கவிஞர் வைரமுத்து

என்
பாசத்துக்குரிய
பழைய முகங்களே!

உங்களுக்கு நான்
அந்நியமில்லை.

என்
வெள்ளைச் சட்டை
உங்களுக்கு
விரோதியில்லை.

புகழ் என்னும்
போதை வஸ்து
உங்கள்
பெயர்களைக்கூடவா
மறக்கடித்துவிடும்?

எனக்குத் தெரியும்.
புகழும் தலைமுடியும்
ஒரு ஜாதிதான்.
அது
உதிர்ந்துவிடுவது சத்தியம்.
அன்றி
நிறந்திரிவது நிச்சயம்.

உங்கள்
வார்த்தைகளில் வீசும்
வட்டார வாசனை
நுகர வந்தேன்.

நான்
பழகிய பழைய கண்களைப்
பார்க்க வந்தேன்.
நான் என்ன மழையா?
ஏன் ஒதுங்குகிறீர்கள்?

இதற்காகவா வந்தேன்
இவ்வளவு தூரம்?
என் ஏமாற்றத்தின் நீளம்
முந்நூறு மைலா?
என் உடம்பில் இருக்கும்
இரத்தம்தான் புதிது.
இருதயம் பழசுதான்.

உங்களின்
காய்த்துப்போன
கைகளின் ஸ்பரிசம்
என்
உள்ளங்கைகளுக்கு
ஞாபகம் இருக்கிறது.

உங்கள்
இண்டலில் இருக்கும்
மண்ணின் மணம்
எப்போதும் பிடிக்கும்
எனக்கு.

என்ன இது?
இந்தச்
சின்ன வருஷங்களின்
இடைவெளியில்
காலம் — தன்
முத்திரை குத்தியே
உங்களைக்
கிழித்து விட்டது.

உங்களில் சிலருக்கு
நரைத்து விட்டதே.
வீடு பழுதானதென்று
வெள்ளையடிக்கிறதா
முதுமை?

அந்தக்
கண்களில் மட்டும்
நான்
பார்த்த ஏழ்மையின்
பழைய ரேகைகள்!
எந்தச் சூர்யோதயமும்
உங்கள்
வறுமை இருட்டின்
வேர்களை இன்னும்
விசாரிக்கவில்லை.

எங்கே?
என்னைத் தன்
தோள் நாற்காலியில்
தூக்கிக் கொண்டு
அத்தனை சினிமாவுக்கும்
அழைத்துச் செல்வானே!
எங்கே
அந்த
ஆதித்ராவிட அண்ணன்?

எனக்குப்
பிரியமாய்க் கடன்
கொடுக்கும்
பெட்டிக்கடைக் கிழவருக்கு
மரணமா?
அந்த
வேப்பமரங்களை ஏன்
வெட்டிவிட்டீர்கள்?

என்
பள்ளித் தோழர்களுக்குச்
சொல்லிவிட முடியுமா?

இது ஒரு
புது மனுநீதி.

சந்தோஷமும் துக்கமும்
சரிவிகிதத்தில்.

பேசுங்கள்!
பேசுங்கள்!
என் கிளைகள்
வெளியேறிவிட்டாலும்
என் வேர்கள் வசிப்பது
இங்கேதான்! இங்கேதான்.



கடந்த 5 ஆண்டுகளில் அறிவியலில் தமிழில் வெளியிடப்பட்டுள்ள இயற்பியல், வேதியியல், உயிரியல் புத்தகங்களுக்கு ஓர் அரிய வாய்ப்பு!

# சிறந்த அறிவியல் நூலுக்கு சிறப்புப் பரிசு




ரூ. 5000

**சிறந்த அறிவியல் நூலுக்கு தமிழ் வளர்ச்சிக் கழகம் சிறப்புப் பரிசு ரூ. 5000/- வழங்க முடிவு செய்துள்ளது.**

- இப்புத்தகம் கல்லூரி படிப்புக்கு ஏற்றதாக இருத்தல் அவசியம்.
- மேற்கண்ட நூல் சாதாரண அச்சில் 300 பக்க அளவில் இருக்க வேண்டும்.
- அச்சிட்ட நூலில் 4 படிகள் அனுப்ப வேண்டும்.
- நூலாசிரியரின் பெயர், முகவரி, மற்றும் தொழில் ஆகியவற்றுடன் முழுமையாக தனது படைப்பிலேயே உருவான நூல் என்ற உறுதி மொழி மற்றும் இந்தப் பரிசுத் திட்டம் சம்பந்தப்பட்டவரை தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் முடிவையே முழு மனதுடன் ஒப்புக் கொள்கிறேன் என்ற உறுதிமொழி முதலிய அடங்கிய விண்ணப்பத்தையும் அனுப்ப வேண்டும்.

1982ல் இயற்பியலுக்கு மட்டுமே பரிசு வழங்கப்படும். மற்ற இரண்டு இயல்களுக்கும் அடுத்தடுத்த ஆண்டுகளில் பரிசு வழங்கப்படும்.

## சிறந்த பொது அறிவியல் நூலுக்கு மற்றுமொரு பரிசு ரூ. 5000/-

பொதுமக்களிடையே நவீன அறிவியலில் நாட்டத்தைப் பெருக்கும் வகையில் தமிழில் எழுதப்பட்ட பொது அறிவியல் நூலில் சிறந்ததற்கு இப்பரிசு வழங்கப்படுகிறது. இதற்கும் மேற்கண்ட நிபந்தனைகளே பொருந்தும்.

---

**இந்த ஆண்டு பரிசுக்கு இயற்பியல் நூலும், பொது அறிவியல் நூலும் வந்தடைய கடைசி நாள் : 31-12-1982**

---



**தமிழ் வளர்ச்சிக் கழகம்**

பல்கலைக் கழக கட்டிடம்
தபால்பெட்டி எண்: 439
சென்னை-600 005
தொலைபேசி: 845440

# படம் இங்கே, துணுக்கு அங்கே!

என்ன இப்படி படம் படமாக என்று திகைக்காதீர்கள்! வேறொன்றுமில்லை, இந்த இதழில் இடம் பெற்றுள்ள தகவல் துணுக்குகளுக்குப் படங்கள் இங்கே சிக்கி விட்டன. கொஞ்சம் புரட்டிப் பார்க்க வேண்டிய அதிகப்படி வேலை உங்களுக்கு!


18




24



30



26

20


39


34


40


54

படத்துக்குப் பக்கத்தில் பக்க எண்



42


12



இது இயற்கை முறையில் பிறந்த கன்று களிடமும் உண்டு. நானே இத்துறையில் இருப்பதால் நன்கு அறிவேன்.
மதுரை ரவிராஜ்

● எனது புகைப்படத்தைப் பிரசுரம் செய்து என்னைப் பற்றிய குறிப்புக்களையும், தங்களது 'கல்கி' 18.7.82 இதழில் கண்டேன். தங்கள் இதழில் பிரசுரமான குறிப்புக்களைக் கண்டு எனக்கு நேர்முக தேர்வுக்கு அழைப்பு விடுத்திருந்த **M/s. Ramesh Engineers Ltd.,** நிறுவனத்துக்கும் எனக்கு வழி காட்ட முன்வந்திருக்கும் திரு கே. பி. ஈஸ்வர நஞ்சப்பன் அவர்களுக்கும் உளங்கனிந்த நன்றி.
மதுரை பா. சந்திரசேகரன்

● 'சிறுகக் கட்டி பெருக வாழலாம்'— இணைப்பு: பிரிண்டிங் பிரஸ் வைக்க அச்சு இயந்திரம் ரூ. 10,000 + ரூ. 2000 சரி.

வட்ட மேஜை

# படமெடுத்தவன் நானிருக்க...

● 22.8.82 இதழ் அட்டைப் படத்தை எடுத்தவர் திரு ஜக்மோகன் என்று தவருகக் குறிப்பிட்டுள்ளீர்கள். அந்த வண்ணப் படத்தை எடுத்தவன் நான்தான். படத்தில் இருக்கும் மாடல்,நடிகை ப்ரீதாவின் தங்கை. (எனக்கும் பெயர் தெரியாது.) மலேஷியாவி லிருந்து வந்திருந்த தோழிகளைப் பார்க்க வென்று ஒரு நாள் ப்ரீதாவும் அவரது தங்கையும் ஹோட்டல் பாம்குரோவுக்கு வந்திருந்த போது அந்த வண்ணப் படத்தை எடுத்தேன். ப்ரீதாவும் அவரது தங்கையும் அப்போது எடுத்துக்கொண்ட கருப்பு வெள்ளைப் படத்தையும் இதனுடன் இணைத்துள்ளேன்.
சென்னை 'யோகா'

● ஸ்ரீமதி எம். எல். வி. பற்றி பம்பாய் டி. வி. ராமானுஜம் எழுதியுள்ள கட்டுரை மிக நன்ருக இருந்தது. அவர் கூருது விட்ட ஒரு சிறப்பியல்பு: எம். எல். வி.க்குத்தொழில் ரீதியான பொருமை உணர்வு என்பது இம்மியளவும் இல்லை. இன்று கச்சேரி செய்பவர்கள் எல்லாரிடமும் பிரியமாகப் பழகுவார். அனைவரிடமும் உள்ள சிறப்பு அம்சங்களை மதித்துப் போற்றி மகிழ்வார்.
சென்னை-34 விஜயலக்ஷ்மி

● 22-8-82 இதழ் வட்ட மேஜையில் சங்கர நாராயணன் செயற்கை முறைக் கருத்தரிப்பில் பிறந்த பெரும்பான்மையான கன்றுகள் பார்வை இழந்திருப்பதோடு கசாப்புக்கடைக்குப் போவதாக எழுதியிருப்பதைப் படித்தேன். அதை ஏற்க முடியவில்லை. செயற்கை முறைக் கருத்தரிப்பில் 99 சதவீதம் நல்ல முறையில் கன்றுகள் பிறக்கின்றன. சில கன்றுகள் 'ஏ' வைட்டமின் குறைபாடுனல் பார்வை இழக்கின்றன. பிரிண்டிங் டைப்கள்? இன்றைய நிலவரத்தில் ஒரு பிரஸ் ஆரம்பிக்கக் குறைந்தபட்சம் ரூ. 30,000 தேவை.
சேலம் மோகன்தாஸ்

● 'அமிதாபுக்கு என்ன உடம்பு' என்ற கட்டுரையில் நான் சொன்னதாகச் சில தவருன கருத்துக்களைத் தங்கள் நிருபர் எழுதியிருக்கிருர். நான் பேட்டியில் தெரிவித்தது பின்வருமாறு:

இரத்தம் உறையாமல் இருப்பதற்கு அல்லது ப்ளேட்லெட் செல்கள் குறைவாயிருப்பதற்கு இன்ஃபெக்ஷன்தான் காரணம்; இந்த ப்ளேட்லெட் குறைவு, இன்ஃபெக்ஷன் காரணமாக ஏற்படும் **D. I. C.** என்ற நிலையினல் உருவாகிறது. டி. ஐ. சி. என்பதைத் தமிழில் சிறிய இரத்த நாளத்தில் உண்டாகும் பரவலான ரத்த உறைவு எனலாம். ஈரலில் உண்டாகும் இன்ஃபெக்ஷன் அல்லது ஈரல் சரிவரச் செயல்படாமை இவைதாம் ரத்தப் போக்கிற்குக் காரணம்.

ஹீமோஃபீலியா நோய் என்பது வேறு. இது சிலருக்குப் பிறவியிலேயே தோன்றிவிடும். இதற்குக் காரணம், இரத்தத்தில் எட்டாவது பகுதி (factor)யோ அல்லது ஒன்பதாவது பகுதி (factor)யோ குறைவாக உற்பத்தியாவதுதான். பிறவியில் அல்லாமல் சிலருக்குச் சில நோய்களின் காரணமாகவும் வரலாம். ஆனல் இன்ஃபெக்ஷன் அல்லது ஈரல் நோய் ஹீமோஃபீலியாவை உண்டாக்காது.

ஜார் அரசனுக்குப் பிறவியிலேயே எட்டாவது ஃபாக்டரின் குறைவு காரணமான இரத்தம் உறையா நிலையின் விளைவாக ஹீமோஃபீலியா நோய் உண்டாயிற்று. அமிதாபுக்கு இந்த நோய் அல்ல.
சென்னை-20 டாக்டர் எஸ். சேதுராமன்

தடையின்றிப் பேசலாம்
ஆங்கில மொழிதனிலே

கடிதினிலே எழுதிடலாம்
கடிதங்கள் ஆங்கிலத்தில்







Big size
384 Pages

Big size
394 Pages

Price for each
Rs. 21/-
postage 4/-

## RAPIDEX
## ENGLISH SPEAKING COURSE

எளிய நடையில் பயனுற அமைந்த ‘ரெபிடெக்ஸ் இங்கிலீஷ் கோர்ஸி’ னைத் தாமே பயின்று ஆங்கில மொழி வட்டாரங்களில் வெற்றி நடை போடுங்கள்.

மொழியியல் அடிப்படையில் இதன் புதுமுறை அமைப்பும், தெளிவான மொழி நடையும் படித்த மாத்திரத்தில் மனதிற் பதியவைக்க வல்லது.

* இதுவரை 80 லட்சம் பேர் படித்துப் பயன்பெற்றுள்ளனர்.
* ஆசிரியர்கள், அறிஞர்கள் 'கல்வியாளர்களால் பரிந்துரைக்கப் பட்டது.

பெயர் பெற்ற பத்திரிகைகளின்
* விமரிசனக் குழுவினரால் புகழாரம் சூட்டப்பட்டது.

*AVAILABLE AT leading book shops. A. H. Wheeler's and Higginbotham's Railway Book stalls throughout India*

## RAPIDEX
## SELF LETTER DRAFTING COURSE

இதன் சிறப்பியல்புகள் —

* விதவிதமான வாக்கியங்கள், பல வேறு சொற்றொடர்கள்.
* ஒரே சூழலில் விதவிதமான வாக்கியங்கள், பல்வேறு சொற்றொடர்கள்.
* விரும்பும் வாக்கியங்களை நீங்களே தேர்ந்தெடுக்கலாம்.
* வேண்டியபடி கோர்வையாக அமைத்துக்கொள்ளலாம்.
* நீங்கள் விரும்பிய கடிதம் தயார்.

மன உளைச்சலின்றி முதற்தரமான கடிதங்கள் வரைய அற்புத சாதனம்.

மூன்று பகுதிகளாக அமைந்த இப் புத்தகம் சொந்த, சமூக, வணிகக் கடிதங்கள் வரையவும், வேலைக்கான விண்ணப்பங்கள் எழுதவும் நம்பகமான வழிகாட்டி.



or ask by V.P.P. from

**PUSTAK MAHAL** KHARI BAOLI DELHI-110006
New Show Room: 10-B, Netaji Subhash Marg, Darya Ganj, New Delhi-110002

VANDANA/PM/Tam.2


அடக்க நான் சொல்றது தான் வழி!
இல்லவே இல்லை!... நான் சொல்றது தான் வழி!
அஸ்ஸாம் கிளர்ச்சியாளர்
மத்திய அரசு
அஸ்ஸாம் பிரச்னை


இத்தனை முட்டைகளா, எப்படித் தான் அடை காக்கப் போகிறேனோ?
இந்திரா காங்கிரஸ்
மா நிலங்களில் பிரச்னைகள்


எல். ராமச்சந்திரன் அண் கோ
பெட்ரோமாக்ஸ், அரிக்கேன், பெட்ரூம் லைட், சிமினி, தீவட்டி விற்கப் படும்!
ராமச்சந்திரன்



# கல்கி

1982 செப்டம்பர் 5
துந்துபி ஆவணி 20
மலர் : 41 இதழ் : 6



## சச்சரவு ஒழிக!

**சு**தந்திர பாரதத்தில் தொழிற் சங்க வளர்ச்சியும் சரி, தொழில் துறை வளர்ச்சியும் சரி, ஆரோக்கியமான விதத்தில் நடக்கவில்லை. அபரிமிதமான கட்டுப்பாடுகள் காரணமாகத் தொழில் துறை உற்பத்தி எதிர்பார்த்த அளவில் இல்லை என்பதோடு லஞ்ச ஊழல், கறுப்புப் பணம் முதலியன கொழிக்கின்றன. தொழிற் சங்கங்களோ அரசியல் தலையீடு காரணமாகவும் வெளி நபர்களின் தலைமையை ஏற்றதன் விளைவாகவும் போட்டி தொழிற் சங்கங்கள் காரணமாகவும் நோயுற்றுள்ளன. கால மாறுபாட்டுக்கு ஏற்ப அனுசரித்துப் போகத் தெரியாத முதலாளிகளின் பிடிவாதமும் அறியாமையும் தொழில் தகராறுகளை வளர்த்துள்ளன.

நிகர விளைவு பயங்கரமானது. திரும்பினால் வேலை நிறுத்தம், கதவடைப்பு, உற்பத்தி மேலும் பாதிப்பு. தொழிலாளருக்குத் துயரம்; முதலாளிகளுக்கு நஷ்டம். 1981ல் வேலை நிறுத்தங்களாலும் கதவடைப்புக்களாலும் எத்தனை வேலை நாட்களைத் தொழிலாளர்கள் இழந்தனரோ அதே அளவு நஷ்டம் 1982ன் முதல் ஆறு மாதத்திலேயே ஏற்பட்டு விட்டது!

இந்தச் சூழ்நிலையில் நாடாளு மன்றத்தில் தொழில் துறை தகராறுகள் சட்டம் (திருத்தம்) நிறைவேறியுள்ளது. 'தொழில் துறையிலும் தொழிற் சங்கங்களிலும் நிலவும் நோய்களை முற்றிலும் குணப்படுத்திவிடும் சர்வரோக நிவாரணி அல்ல இது' என்பதைத் தொழிலாளர் நலன் அமைச்சர் ஆஸாத் ஒப்புக்கொண்டிருக்கிறார். ஆனால் சர்ச்சைகள் தீர்க்கப்பட கால வரம்பு நிர்ணயிக்கப்பட்டிருப்பதாலும், தொழிலாளரும் சரி, முதலாளிகளும் சரி எப்படியெல்லாம் நடந்துகொள்ளக் கூடாது என்று திட்ட வட்டமாக வரையறுக்கப்பட்டிருப்பதாலும் இச்சட்டத்தை நோயின் அறிகுறிகளான தலைவலி உடல் வலிகளையேனும் குறைக்கும் குளிகை எனக் கருதலாம்.

'கல்வி நிலையங்கள், மருத்துவமனைகள், ஆய்வுக் கேந்திரங்கள் போன்றவற்றில், வேலை நிறுத்தப் பண்பாடு வளர விடக் கூடாது' என்று ஆஸாத் அழகாகக் கூறியுள்ளார். இவற்றுடன் போலீஸ், மின்சப்ளை, போக்குவரத்து போன்றவற்றையும் சேர்க்கலாம். ஆனால் இங்கெல்லாம் பணியாற்றுவோருக்கு உள்ள குறைகளை எடுத்துக் கூறத் தகுதி பெற்ற அமைப்புக்கள் இருக்கத்தான் வேண்டும். போராட்டம் தொடங்கினால்தான் அரசு கவனிக்கும் என்ற நிலை மாறி, இந்த அமைப்புக்களின் குரலுக்கு அரசு உடனே செவி சாய்க்கவும் வேண்டும்.

நூறு பேருக்கு அதிகமாகப் பணியாற்றும் எந்த நிறுவனத்திலும் குறைகளைக் கவனிக்கும் அமைப்பு இருக்க வேண்டும் என்பது போன்ற பல நல்ல யோசனைகளைப் புதிய திருத்தச் சட்டம் உள்ளடக்கியதாய் இருக்கிறது. எனவே பாதுகாப்புப் பெறும் தொழிலாளர்களின் எண்ணிக்கை அதிகரிக்கிறது.

ஆயிரம் சட்டங்கள் வந்தாலும் அன்பான அணுகுமுறைக்கும் ஒப்புரவுக்கும் எதுவும் ஈடாகாது. 'சுயநலன் தேசநலனைப் பாதிக்க விடமாட்டோம்' என்று இரு தரப்பினரும் உறுதியாக இருந்தால் பாரதம் மற்றொரு ஜப்பானாக வளர்ச்சிபெறும்.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

பாரதி நூற்றாண்டு மலர்

# இலவசம்!

## சுந்தரம் கிளேட்டன்

*அளிக்கும்*

## டி.வி.எஸ்-50 மொபெட்!






**இந்துமதி** எழுதும்

**மண்ணில் தெரியுமோ வானம்?**

புதிய தொடர்கதை

ஆரம்பமாகும் செப்டம்பர் 12உ

கல்கி இதழிலிருந்து

தொடர்ந்து கல்கி வாங்குவோருக்கு

**டி வி எஸ்-50 மொபெட்**

பரிசு பெற வாய்ப்பிருக்கிறது!

விவரங்கள் அடுத்த இதழில்....

# 34

''பெரு மதிப்புக்குரிய மன்னரும், அன்பைச் சொரிந்து வந்துள்ள பெரியப்பாவுமான முத்தரையருக்கு.

''என்னையும் அண்ணனையும்மட்டுமின்றித் தஞ்சையையும் மீட்கத் தாங்கள் சந்திரலேகையிலிருந்து புறப்பட்டுப் புயல் வேகத்தில், பெரும் படையுடன் வந்திருக்கிறீர்கள். தங்களுக்கு உள்ள தன்மான உணர்வையும், எங்கள் மீது உள்ள அன்பையும் பார்க்க என் உள்ளத்தில் பெருமை பொங்குகிறது. ஆனால் பெரியப்பா...

''சற்று யோசியுங்கள். ஏற்கெனவே நடந்த போரில் பல நூறு வீரர்கள் வீர சொர்க்கம் எய்தினர். மேலும் பலர் பலத்த காயங்களுடன் உயிருக்குப் போராடிக் கொண்டிருக்கின்றனர். மீண்டும் ஒரு யுத்தத்துக்கு அவசியமில்லை; உயிர்ச் சேதங்களும் வேண்டாம்.

''பெரியப்பா, நான் இப்படி வாதாடுவதற்கு இன்னொரு காரணமும் இருக்கிறது. என்னை மன்னியுங்கள். உங்கள் அருமை



வளர்ப்பு மகள் சோழ இளவரசரிடம் தன் மனத்தைப் பறிகொடுத்து விட்டாள்! எனக்குள்ளேயே நான் எவ்வளவோ போராடிப் பார்த்தும் பயனில்லை. காதல் என்னை முழுமையாகத் தன்வயப்படுத்திவிட்டது. கோமளமான என் இதயம் கோமகனிடம் தஞ்சம் புகுந்துகொண்டது. எப்படி இந்த மாயம் நடந்தது என்று எனக்கே புரியவில்லை!

''இளவரசரும் என் கரம் பற்றத் துடியாக இருக்கிறார். ஏற்கனவே ஒரு முறை என்னைப் பெண் கேட்டு அவர் சந்திரலேகைக்குத் தூது அனுப்பியது உங்களுக்கு நினைவிருக்கும். அப்போது அண்ணன், இளவரசரை ஏளனம் செய்ய நானும் சிரித்து வைத்தேன். தூதனையும் அவமதித்துத் திருப்பி அனுப்பிவிட்டோம். அது எவ்வளவு பெரிய தவறு என்று இப்போது உணர்கிறேன்.

''நான் என் தகுதிக்கு மீறி எழுதுவதாகக் கருதினால் பொறுத்தருளுங்கள். தங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். தஞ்சைக் கோட்டையைத் தாக்குகிற அல்லது முற்றுகை இடுகிற யோசனையைக் கைவிடுங்கள். இளவரசரின் விருந்தினராக வந்திருந்து, எங்கள் திருமணத்தையும் நடத்தி வைத்து ஆசி நல்குங்கள்.''

தஞ்சைக் கோட்டைக்கு வெளியே தண்டு இறங்கியிருந்த முத்தரையரின் உடல் இந்த ஓலையைப் படித்ததும் பதறியது. மீசை துடித்தது. திருப்பம் கொணர்ந்த தூதனை வெறித்து நோக்கினார்.

மன்னரின் மனநிலையைப் புரிந்துகொண்ட உத்தர அமைச்சர், வேல் முனையில் ஒரு வெள்ளைக் கொடியுடன் நின்ற தூதனை நெருங்கி, தோளை அணைத்தவாறு கூடாரத்துக்கு வெளியே அழைத்துச் சென்றார். ''யார் அங்கே?'' என்று விளித்து, ''இந்தத் தூதனுக்கு உரிய மரியாதை காட்டி உபசரியுங்கள். மன்னரின் பதில் எழுதியானதும் திரும்பவும் அழைக்கிறேன்'' என்றார்.

தூதன் தலை மறையவே காத்திருந்தவர் போல் ஓலையை வீசி எறிந்து வெடித்தார் முத்தரையர்: ''உத்தமசீலி என்னை யார் என்று எண்ணினாள்? சிறுமியாக இருக்கையில் மழலையால் என்னை அடிமைப்படுத்திய நினைவுகளே தொடர்கின்றனவா இவளுக்கு? இவள் நினைத்தால் விஜயாலயனைப் பகைத்துக்கொள்ள வேண்டியது; நினைத்தால் மனம் மாறிக்காதலிக்கிறேன் என்று உருக வேண்டியது! எல்லாவற்றுக்கும் நான் தலையாட்ட வேண்டும்! ஒரு ஓலை அனுப்பிப் படைகளுடன் உடனே புறப்பட்டு வரவும் என்றால் பதறித் துடித்துக் கொண்டு வரவேண்டும்! இன்னொரு ஓலை அனுப்பி யுத்தம் வேண்டாம் என்றால் பின்வாங்கிச் செல்ல வேண்டும்! சீச்சீ! பெண் புத்தி பின் புத்தி என்பது சரியாகத்தான் இருக்கிறது!''

''அரசே!'' என்று தயங்கி உத்தர அமைச்சர் நிறுத்த, ''பேசுங்கள், பேசுங்கள்! தலைக்குத் தலை எல்லோரும் கூறும் யோசனைகளைக் கேட்டுக் கொள்ளத்தானே நான் இருக்கிறேன்'' என்று அலுத்துக் கொண்டார் முத்தரையர்.



செம்பியன்

# ரவிகுல திலகன்

''பிரபோ! தங்களுக்கு ஏற்பட்டுள்ள அவமான உணர்வும் ஏமாற்றமும் எனக்குப் புரிகிறது. பழி வாங்கத் தாங்கள் துடிப்பதும் தெரிகிறது. என்றாலும் ஒரு பெரிய முயற்சியை மேற்கொள்ளும் முன்னர் நாம் பலவாறும் சிந்திப்பது நல்லதல்லவா? துணிந்த பின் எண்ணுவது என்பது இழுக்கல்லவா?''

''சரி சரி, பீடிகைகள் போதும். கருத்தைக் கூறுங்கள்!''

''மன்னவா! உத்தமசீலி மெய்யாலுமே மனம் மாறி விஜயாலயனைக் காதலிப்பதாக இருக்கலாம். அல்லது....''

''இப்படி எழுதுமாறு அவள் நிர்ப்பந்தப் படுத்தப்பட்டிருக்கலாம் என்கிறீர்களா?''

''சாத்தியக்கூறுகள் உள்ளன என்பதை மறுப்பதற்கில்லை.''

''அமைச்சரே! அவ்வாறானால் இந்தக் களங்கத்தை, முத்தரையர் குலத்துக்கு ஏற்பட்டுள்ள இழுக்கைத் துடைத்தெறிய நாம் உடனே சித்தமாக வேண்டாமா? எனது அருமை வளர்ப்பு மகள், சகல மரியாதைகளையும் பெற வேண்டிய கலையரசி வற்புறுத்தலுக்கு உள்ளாகிறாள் எனில் அதைச் சகித்துக் கொண்டு எப்படி இருப்பது? உத்தர அமைச்சரே, கோட்டையைத் தாக்குவதற்கு உடனே உத்தரவிடுங்கள்!''

''பிரபோ! தங்கள் சித்தம் அதுவானால் நான் நிறைவேற்றிவைக்கக்காத்திருக்கிறேன். ஆனால் தஞ்சைக் கோட்டையைத் தாக்கி மீண்டும் நம் வசப்படுத்துவதென்பது அவ்வளவு சுலபமான காரியமல்ல... நமது எல்லைக் காவல் படைகளைத் துவம்சம் செய்த விஜயாலயன் பெரும் படை பலத்துடன் கோட்டைக்குள் இருக்கிறான். நமது தாக்குதல்களை முறியடிப்பது அவனுக்கு எளிதாகவே இருக்கும். பொதுவாகவே அரணுக்குள்ளிருந்து கொண்டு போராடுவதில் அனுகூலங்கள் இருக்கின்றன அல்லவா?''

''அப்படியானால் முற்றுகைக்கு ஆயத்தம் செய்யுங்கள்!''

''செய்யலாம், ஆனால்....''

''இதற்கும் ஆனால்தானா?''

''உத்தமசீலியும் திவாகரனும் கோட்டைக்குள் சிறைப்பட்டிருக்கிறார்கள் என்பதை நாம் நினைவில் வைக்க வேண்டாமா, பிரபோ! நாம் கோட்டையைத் தாக்கினாலும் சரி, அல்லது முற்றுகை இட்டுப் பணிய வைக்க முயன்றாலும்சரி, அவ்விருவருக்கும் விஜயாலயனால் தீங்கு நேராது என்பது என்ன நிச்சயம்? நம் பக்கம் வெற்றி நெருங்க நெருங்க விஜயாலயனுக்கு அவர்கள் மீது வெறுப்பும்கோபமும் அதிகரித்துக் கொண்டே போகுமல்லவா?''

''ஆகா! இந்திர விழாவை முன்னிட்டு உத்தமசீலியும் திவாகரனும் தஞ்சை வந்த சமயம் பார்த்து இவன் படையெடுப்பு நிகழ்த்தியதே இதற்காகத்தானா! திட்டமிட்ட சதி!'' என்ற முத்தரையர், முதுகுப்புறம் கரங்களைப் பிசைந்தவாறே கூடாரத்துக்குள் குறுக்கும் நெடுக்குமாக உலாவினார்.

திடுமென்று ஓரிடத்தில் நின்று அமைச்சரை நோக்கித் திரும்பி, ''தஞ்சை அரச மாளிகையிலிருந்து கோட்டைக்கு வெளியே வர ஒரு ரகசிய சுரங்கப் பாதை இருக்கிறதல்லவா?'' என்று வினவினார் தளிர் விடும் நம்பிக்கையுடன்.

''இருந்தது'' என்றார் அமைச்சர்.

''இப்போது இல்லையா?''

''இங்கு வந்து சேர்ந்ததும் முதல் காரியமாக அதைத்தான் ஆராய்ந்தேன். அதன் வெளி வாசல் அடைபட்டுக் கிடக்கிறது. இடித்துத் தகர்த்துக் கொண்டு நாம் அது வழியே சென்றாலும் உட்புற வாயிலில் பலத்த காவல் இருக்கும் என்பது உறுதி.''

''சுரங்கப் பாதையின் ரகசியம் அம்பலமான பிறகு நமக்கு அதனால் என்ன பயன்? அதன் வழியே உத்தமசீலியையும் திவாகரனையும் சிறை மீட்டு அழைத்து வர முயல்வது முட்டாள்தனமாகத்தான் முடியும்'' என்றார் முத்தரையர் சோர்வாக. ''நரித்தனம்! அத்தனையும் குள்ள நரித்தனம்! புலிக் கொடியைத் தாழ்த்தி நரிக் கொடியை உயர்த்தட்டும் விஜயாலயன்!''

''பிரபோ! எதிரியை எடை போடும் போது நமது விருப்பு, வெறுப்புக்கள் நியாய உணர்வைப் பாதிக்க விடக் கூடாது. நஷ்டம் நமக்குத்தான்.''

''நீர் என் சார்பில் பேசுகிறீரா அல்லது விஜயாலயனுக்காக வாதாடுகிறீரா என்றே சில சமயம் புரிவதில்லை'' என்று சிரித்தார் முத்தரையர்.

---

**எல்லாவற்றையும் பொம்மையே சொல்லி விடுகிறது!**

ஜெர்மனியில் (டிரெஸ்டன்) யந்திர சாதனங்களின் உதவியுடன் நமக்கு நாமே விளக்கம் பெற்றுக் கொள்ளக் கூடிய கண் காட்சி சாலை ஒன்றுள்ளது.

பெண்ணுடல் கருப்பையில் கரு உருவாகி எவ்வாறு வளர்ந்து குழந்தையாகப் பிறக்கிறது என்பதை அங்கு முழு உருவில் நிர்வாணமாக நிறுத்தப் பட்டுள்ள பெண்ணின் பொம்மை உருவம் கூறுகிறது. தன்னைப் பற்றியும், தன் உள் உறுப்புக்கள் பற்றியும், அவை இயங்கும் விதம் பற்றியும் குழந்தையின் கரு ஏற்படுவதிலிருந்து குழந்தையாக வெளி வருவது பற்றியும் விளக்கம் தரும் ஆற்றல் பெற்றுத் திகழ்கிறது. அந்தக் கண்ணாடிப் பெண் உருவம் தன் உள் உறுப்புக்கள் இயங்குவது பற்றி எட்டு மொழிகளில் விளக்கம் தருகிறது.

—பி. நாராயணன்

ஆயிரக்கணக்கான குடும்பங்கள் காலங்காலமாக
பயன்பட்டுவரும் கிராம்புத் தைலத்தின்
நன்மைகளை ப்ராமிஸில் கண்டுணர்ந்தனர்.

# கிராம்புத் தைலம் கொண்ட
# இணையற்ற டூத்பேஸ்ட்
# ப்ராமிஸ்

நீங்களும் ஏன் அதை உபயோகிக்கக்கூடாது?

அட!
ப்ராமிஸ் போல
டூத்பேஸ்ட்டை ஏன்
இதுவரைக்கும்
யாரும்
தயாரிக்கல!

## ப்ராமிஸ்

பற்சிதைவிலிருந்து பாதுகாக்கிறது,
வாய்க்குப் புத்துணர்ச்சி
தருகிறது மற்றும்
துர்நாற்றத்தை அகற்றுகிறது.




பல்ஸாரா தயாரிப்பு



ஆரோக்கியமான பற்கள்,
ஈறுகள் மற்றும் புத்துணர்ச்சிமிக்க
மூச்சுக்கு ப்ராமிஸ்.

CHAITRA-BLS-453-R TAM

காலி குழாய் விற்பனை கடைசியாக 1982 டிசம்பர் 31ந்தேதி வரை தள்ளி வைக்கப்பட்டிருக்கிறது

''அது என் துரதிர்ஷ்டம் என்பது தவிர வேறென்ன நான் கூற?''

''அறிவை உணர்ச்சிகள் வெற்றிகொள்ள அனுமதித்தால் குழப்பம் ஏற்படுவது இயல்பு என்று கூறலாமே?'' என்ற முத்தரையர் அமைச்சரை அணுகி, அவர் தோளை வலக் கரத்தால்தட்டித் தமது நன்மதிப்பை உணர்த் தினர். ''இருக்கட்டும், எப்படியும் பல்ல வேந்திரர் தமது ஆணையை அனுப்பாமலா இருப்பார்? அவர் ஆணையை விஜயாலயன் மதிக்காமலா போய்விடுவான்?''

''பிரபோ! எனக்கென்னவோ பல்லவேந் திரர் நம் உதவிக்கு வருவார் என்று தோன்ற வில்லை. அப்படி உதவுவதானல் விஜயால யன் பழையாறையை விட்டுப் புறப்பட்ட போதே அவனை மாதண்ட நாயகர் பாரா சிரயன் தடுத்து நிறுத்தியிருக்கலாம். செய்ய வில்லையே? அவனுடைய இந்தப் பகிரங்கப் புரட்சியை அனுமதித்தது எதனுல்...?''

இடுக்கிட்டு நின்ற முத்தரையர் சற்று நேரம் பொறுத்து, ''பாண்டியனுடன் நான் செய்துகொண்ட வர்த்தக ஒப்பந்தம் காரண மென்கிறீரா?'' என்ருர் கம்மிய குரலில்.

''ஆம் மன்னவா! அது பற்றிய விவரம் சக்கரவர்த்திகளின் செவிகளுக்கு எட்டியிருக் கும் என்றே கருதுகிறேன்.''

''அப்போதே நீர் எச்சரித்தீர்! நான்தான் மதிகெட்டுப் போய்த் திவாகரனின் பேச்சைக் கேட்டுச் செயல்பட்டேன்!''

''சென்றது பற்றி வருந்தி என்ன பயன்? இனி ஆக வேண்டியதைப் பார்ப்போம்'' என்ருர் உத்தர அமைச்சர்.

''என்னதான் செய்யச் சொல்கிறீர்?''

''சமாதானக் கொடியுடன் வந்த தூதனை உபசரித்துப் பரிசுகள் அளித்து அனுப்பி வையுங்கள். உத்தம சீலியின் சீரிய யோசனையை ஏற்றுக் கொள்ளுங்கள்.''

''என்னை ஏமாற்றித்தஞ்சைப்பெருநகரைப் பறித்துக் கொண்டவனுக்கு வெற்றிக் காணிக் கையாக என் அருமை வளர்ப்பு மகளையும் கொடுத்துவிடச் சொல்கிருய்! இதைவிடப் பேரவமானம் வேறு என்ன வேண்டும்?''

''இல்லை பிரபோ! அவமானத்தைத் தவிர்ப்பதற்கே நான் யோசனை கூறுகிறேன். தோல்வியை வெற்றியாக்கும் மார்க்கம் இதி லிருப்பதை உணர்த்த விரும்புகிறேன்!''

வியப்புடன் நிமிர்ந்தார் முத்தரையர்.

''பிரபோ! சற்று யோசியுங்கள். நீங்கள் சந்திரலேகை திரும்பியதும் மக்களிடம் என்ன கூறப்போகிறீர்கள்? விஜயாலய னும் உத்தமசீலியும் ஒருவரை ஒருவர் மனமாரக் காதலிக்கிருர்கள் என்று உங் களுக்குத் தெரிய வந்தது. உடனே பெருந் தன்மையுடன் ஆசி நல்கித்தாமதமின்றித்திரு மணத்தை நடத்தி வைத்தீர்கள். உத்தம சீலிக்குச் சீதனமாகத் தஞ்சைப் பெரு நகரையே வழங்கினீர்கள். புராதனமான தலைநகர் பழையாறையைத் துறந்து இனி விஜயாலயன் உங்களால் வழங்கப்பட்ட தஞ்சையைத் தலைநகராக்கிக் கொண்டு அர சாள்வதில் பெருமையடைகிறன். உங்கள் பெருந்தன்மையையும் கொடையுள்ளத்தை யும் கண்டு பிரமித்த அவன் உங்களுக்குத் தஞ்சையில் பெரிய அளவில் வரவேற்பு தந்து, மரியாதைகள் பல செய்து, பின்னர் வழி யனுப்பி வைத்தான்....''

கேட்கக் கேட்க முத்தரையருக்கு வியப்பு மேலிட்டால் கண்கள் விரிந்தன. ''உத்தர அமைச்சரே! சிறந்த மதியூகி என்று மீண்டும் ஒரு முறை நிரூபித்து விட்டீர்கள். பல்ல வேந்திரரும் ஏற்பாரா இந்த விளக்கத்தை?''

''ஏற்காமலென்ன? இந்த விளக்கத்தை ஒப்புக்கொள்வதால் அவருக்கு என்ன நஷ் டம்? ஒப்புக்கொள்ளாததால் என்ன லாபம்? விஜயாலயனை அவர் முதுகில் தட்டிக் கொடுக் கலாம். ஆனல் உங்கள் கௌரவத்தைக் காப் பதிலும் அவருக்கு அக்கறை இருக்கும்.''

• • •

மறுமொழி அடங்கிய ஓலையுடனும் பரிசில் களுடனும் தூதன் திரும்பிய சிறிது காலத் துக்குள் தஞ்சை நகரமே வியத்தகு மாறு பாடுகளை அடைந்தது. யுத்தம் நடந்துமுடிந்த சுவடோ அல்லது இனி நடக்கலாம் என்பதற் கான அறிகுறியோ எதுவுமே காணும்! எங்கு பார்த்தாலும் மாவிலைத்தோரணங்கள், மலர் ஆரங்கள், பூரண கும்பங்கள்! வீட்டு வாசல்களில்வீதியை அடைத்துக் கோலங்கள், திரும்பின பக்கமெல்லாம் பட்டொளி வீசிப் பறந்த புலிக் கொடிகள். மக்கள் மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்து புத்தாடைகள் புனைந்து இங்குமங்குமாக ஒரு காரணமுமின்றிப் பர பரப்புடன் அலையும் காட்சிகள்!

சேனபதி அரயனைத் தனியே அழைத்து எச்சரித்தான் விஜயாலயன். ''தளபதி! முத்தரையனை வரவேற்கும் உற்சாகத்தில் தஞ்சையின் பாதுகாப்புக் குறித்து அலட்சிய மாக இருந்து விடாதீர்கள்! நம் வீரர்கள் போருக்குச் சித்தமாக இருப்பது போல் வெளிக் காட்டிக் கொள்ளாது போனலும் சதா விழிப்புடன் இருக்க வேண்டும். எந்தக் கணமும் முத்தரையருடைய படைகளின்



# தொழில் வளர்ச்சிக்கேற்ற கூரை

''ராம்கோ'' நமது நாட்டின் வளர்ந்து வரும் தொழில் துறையில் முக்கிய பங்கேற்று, தொழிற்சாலைகளுக்கு தேவையான தரமுள்ள அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகளை தயாரித்து அளிக்கிறது.

CAS/SACL/5 82.TAM A

Ramco

''ராம்கோ'' அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகளும் மற்ற உபகரணங்களும்—தரமான கூரைகளுக்கு மட்டுமல்ல நிரந்தரமான பாதுகாப்புக்கும்கூட.




**சதர்ன் அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் லிமிடெட்**

739, அண்ணா சாலை, சென்னை-600 002. போன் : 82006

பரிபூரண விற்பனையாளர்கள் : ராஜா சாரிடி டிரஸ்ட்

"ராம்கோ" முத்திரைக்கு மேன்மேலும் புகழ் சேர்ப்பது, அதி நவீன தொழில் நுட்பமும், மிகக் கடுமையான தரக்கட்டுப்பாடுமே. "ராம்கோ" அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகள் நிரந்தர பாதுகாப்பைத் தருவதன் இரகசியமும் இதுவே.

நாடெங்கிலும் பரவிவரும் தொழில் பேட்டைகளிலும், தொழிற்சாலைகளிலும் பெரும்பான்மையாக உபயோகப்படுத்தப்படுவது "ராம்கோ" அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகளே.

தாக்குதலை எதிர்பார்த்தே எந்தக் காரியத்தையும் செய்ய வேண்டும். தந்திரமாக நடந்து கொள்ள நமக்கு மட்டும்தான் தெரியும் என்று எண்ணி விடக் கூடாது! முத்தரையர் தமக்கு ஏற்பட்ட அவமானங்களை அடியோடு மறந்து விட்டார் என்று நம்பி விடவும் கூடாது. புரிகிறதா?''

''ஆக்ஞை பிரபோ! முத்தரையருக்குச் சிறப்பாக வரவேற்புத் தந்து உபசரிப்பதிலும் திருமணத்துக்கான ஏற்பாடுகளைக் கவனிப்பதிலும் நம் வீரர்களின் ஒரு பகுதியினர் ஈடுபடுகையிலேயே மற்றுமொரு பெரும் பகுதியினர் தஞ்சைக் கோட்டையை உயிரைக் கொடுத்தேனும் காப்பதில் கண்ணும் கருத்துமாய் இருப்பார்கள். கோட்டைக்கு வெளியே தண்டு இறங்கியுள்ளமுத்தரையரின் படைகள் நடமாட்டத்தில் சிறிதளவு சந்தேகம் எழுந்தாலும் உடனே உங்களை எச்சரித்து ஆணைகளைப் பெறுவேன்'' என்றான் அரையன்.

''நல்லது: முத்தரையர் தமது உத்தர அமைச்சருடன் ஐம்பதின்மருக்கு மேற்படாத முக்கிய பரிவாரங்களுடனும் கோட்டைக்குள் நுழைய அனுமதி வழங்குங்கள். சந்திரலேகைக்கு அவர் தூதர்களை அனுப்பி நெருங்கிய உறவினர்களையும் அரண்மனை அதிகாரிகளையும் வரவழைக்கலாம் என்று தெரியப்படுத்துங்கள். அவ்விதம் வருகின்ற அவர்களைக் கண்காணிப்பது தெரியாமல் கவனித்து வர ஒற்றர்களுக்கு உத்தரவிடுங்கள்.''

மேலும் சில முன்னேற்பாடுகளைக் கவனித்து விட்டு விஜயாலயன் பரணி மீது தாவி ஏறி அதனை மருத்துவமனைப் பகுதிக்குச் செலுத்திச் சென்றான். போரில் காயமுற்றிருந்த வீரர்கள் அங்கே நூற்றுக் கணக்கில் படுத்துக் கிடந்தார்கள். அவர்களுக்குப் பொறுமையும் புன்னகையுமாகப் பணிவிடைகள் செய்து கொண்டிருந்தாள் குவளை. முனகல்களையும் அலட்டல்களையும்கேட்டுக்கொண்டே நடந்த விஜயாலயன் இங்கு ஒரு வீரனைத் தட்டிக் கொடுத்தும் அங்கு ஒருவனுக்கு ஆறுதல் கூறியும் முன்னேறினான். சிலரது வணக்கங்களை ஏற்றுப் பதில் வணக்கம் செலுத்தினான். நேற்றுவரை முத்தரையர் சார்பில் யுத்தம் செய்து விரோதியாக விளங்கியவர்கள் இன்று தன் வீரர்களுக்குத் தோழர்களாக மாறி இருவருக்கும் பொது எதிரியான மரணத்துடன் போராடுவதைப் பார்த்தான். மனிதாபிமானத்துடன் அவர்களையும் ஊக்குவித்தான்.

ஒரு வீரனுக்கு ஈரத் துணியால் முகத்தையும் உடலையும் துடைத்து விட்டுக்கொண்டிருந்த குவளையை முழங்கைக்கு மேல் பற்றி இலேசாக வற்புறுத்தி அப்பால் தனி இடத்துக்கு அழைத்துப் போனான்.

''குவளை! இப்படி இராப் பகலாக உழைத்தால் உடம்பு என்னாவது? சற்றேனும் ஓய்வு வேண்டாமா உனக்கு?''

''எனக்கு எதற்கு ஐயா ஓய்வு?'' என்று கேட்டாள் குவளை. ''நேரத்துக்கு உண்டு, உறங்கி, இந்த உடலைக் கண்ணும் கருத்துமாகக் காப்பாற்றி வந்து யாருக்கு உடைமையாக்கப் போகிறேன்?'' என்றாள். நிமிர்ந்து நோக்கிய அவள் முகத்தில் கண்கள் கலங்கியிருந்தன. அவற்றில் தன் பிரதிபிம்பங்களைக் காண வெட்கினான் விஜயாலயன்.

(தொடரும்)







"குடும்பப் பொறுப்புக்கு
ஈடு கொடுக்க கொள்ளைத்
தெம்புதேவை...எனக்கு
அள்ளித் தருகுது நான்
பருகும் விவா"




"குடித்தனம் நடத்துகிற பொறுப்புத்
தான், காலெல்லாம் பம்பரமாய்
ஓடியாடி உழைக்க வைக்கிறது
என்னை... அதுவும் உற்சாகத்தோடு
செய்கிறதைக் கச்சிதமாய்ச்
செய்கிறேன். நான் பருகும் விவா
எனக்கு வற்றாத தெம்பு தருகிறது.
பார்லி, கோதுமை இவற்றின்
மால்ட் சத்துக்கள், பால், வைட்டமின்கள்
அடங்கிய விவா திரணிகை எளிதானது.
பாலிலேயும் சரி, நீரிலேயும் சரி
கலக்க இலகு. சூடான பானமாகவோ,
குளிர் பானமாகவோ சுவையுடன்
அருந்தலாம். அலுக்காமல் உழைக்க
எனக்கு சளைக்காத தெம்பு--
தருகிறது விவா."

# "தெம்பு தரும் விவா உனக்கு நன்றி!"



மாண்ட் (உலக) தேர்வில் வெள்ளிப்
பதக்கம் வென்றது, ஆம்ஸ்டர்டாம் 1981

**JiL** ஜகத்ஜீத் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்

SP/JIL: V/3/2012 TM

# கவர்ச்சிகள்

கிருஷ்ணமணி

27

சாப்பிடுவதைக்கூட நிறுத்திவிட்டு முரளி தன்னையே கவனிப்பதை உணர்ந்த ஹிரண்மயி அவனை எறிட்டுப் பார்த்தாள்.

“ஏன் முரளி பேசவே மாட்டேங்கிறீங்க?''

''நான் ஒரு கல்யாணத்துக்குப் போகணும்.''

''எங்கே?''

''திருவொற்றியூரிலே. எட்டரைக்குள்ளே அங்கே இருக்கணும்.''

''டோண்ட் வொர்ரி! நான் கொண்டு போய் விட்டுடறேன். பீ செயர்ஃபுல்!''

சிற்றுண்டி முடிந்ததும் காப்பி வந்தது. அதைக் குடித்து முடித்ததும் மாதவன் என்று அழைக்கப்பட்டவன் கட்டணச் சீட்டைக் கொடுத்தான். பத்து ரூபாய்த் தாளை எடுத்து வைத்தாள்.

''நான் கொடுத்திருக்க மாட்டேனா?'' முரளி கேட்டான்.

அவள் புன்னகைத்தாள். பிறகு சற்றே தாழ்ந்த குரலில் சொன்னாள்: ''ஒரு சிறு பிசகினால் இன்று நாம் நண்பர்களாக மட்டுமே இருக்கிறோம். அதுமட்டும் நடந்திரா விட்டால் நம் உறவு முறையே வேறாக இருந்திருக்குமல்லவா? நீங்கள் வேறு நான் வேறு என்று என் மனத்தில் இந்த நிமிடம்வரை பேதம் இல்லை.''

முரளிக்கு அவள் பேச்சு வியப்பாக இருந்தது.

''ஹிரண்மயி!'' அவன் கண்கள் அவளையே பார்த்தன.

''ப்ளீஸ் டியர்! அப்படிப் பார்க்காதிங்க. என்னாலெ தாங்க முடியல்லே.''

''இப்பவும் கூடவா? நீ இந்த உயர்ந்த நிலையிலே இருக்கும்போதுகூடவா?'' அவன் இது கேட்டு அவன் வாயைப் பொத்தினாள்.

''பொருளாதார ரீதியிலே நான் உயர்ந்து இருக்கலாம். ஆனா என்னிக்குமே மனசிலே நான் உங்களுக்குச் சமமானவள்தான். ஊருக்கும் உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும் ஹிரண்மயி பெரிய மனுஷி. எவுமன் வித் எ ஸ்டேட்டஸ். ஆனா... ஆனா...'' மெல்லத் தன் இடது கையினால் அவன் கரத்தைப் பற்றினாள்.

பேரர் மீதம் கொண்டு வந்தான். அவளுக்கு என்ன தோன்றியதோ. 'கீப் இட் மாதவன்'' என்றாள்.

முரளி கேட்டான்: ''மாதவன்! எனக்கு கோல்ட் ஃபிளேக் சிகரெட் வேணும். இந்தா பணம்! அரை பாக்கெட் போதும்!''

''வேண்டாம் ஸாரே! இதிலே பாக்கி நிறைய இருக்கு. நானே வாங்கிட்டு வரேன்.''

அவன் அவளைப் பார்த்தபோது அவள் விழிகளின் ஓரத்தில் நீர் மல்கி நிற்பது தெரிந்தது.

கண்ணாடியைக் கழற்றிவிட்டுத் துடைத்துக்கொண்டாள்.

அவள் கேட்டாள்: ''முரளி! நீங்க எப்பத்திலேருந்து சிகரெட் பிடிக்கிறீங்க?''

அவன் பதில் சொல்லவில்லை.

''உடம்புக்கு ஆகுமா? எனக்குத் தெரியும். அதுக்குக் காரணம் நான்தான்னு. நான்கூட நீங்க வேலையை ராஜினாமாச் செய்துட்டுப் போன பிறகு ரெண்டு மாசத்துக்குத் தினமும் தவறாம விஸ்கி குடிச்சேன். உங்களை..''

மாதவன் மீண்டும் வந்தான். முரளி தான் சிகரெட் ஒன்றைப் பற்றவைத்துக் கொண்டான். கைக் கடிகாரத்தைப் பார்த்தான். மணி ஏழே முக்கால்.

புரிந்துகொண்டவள் போல் அவள் காரை ஸ்டார்ட் செய்தாள். ஓட்டலினின்றும் வெளியே வந்ததும், கிழக்குப் புறமாகத் திரும்பினாள்.

''பீச்ரோட்டிலேயே போயிடலாம்!'' கார் வேகமெடுத்தது. ஐம்பது... அறுபது... எழுபது.... மிக அனாயாசமாக ஓட்டினாள்.

அவள் மனத்தில் ஏற்பட்ட வேகத்திற்கு காரின்வேகம் ஈடுகொடுக்கமுடியவில்லையோ?

''ஹிரண்! ஜாக்கிரதையா ஓட்டு!''

''டோண்ட் வொர்ரி!''

**சேரவேண்டிய இடம்!**

பஞ்சாப் மாநிலத்தில் உள்ள ஒரு கிராமத்தில் இரண்டு கோணிப்பை நிறைய கடிதங்கள் ஒரு குட்டையிலிருந்து எடுக்கப்பட்டன. இதைக் கண்டு பிடித்த டாக்டர் ஒருவர் குட்டையில் இருந்த மாடு ஒன்று கடிதங்களைச் சாப்பிடக் கண்டார். பல மாணவர்களின் 12ம் வகுப்பு பரீட்சை மார்க் ஷீட்டுகள் இவற்றில் இருந்தனவாம்! ('சண்டே'யிலிருந்து கணபதி சுப்பிரமணியன்)

கிழக்கே கடல் சாம்பல் பூசிக் கொண்டிருந்தது. தூரத்தே இரண்டு மூன்று கப்பல்கள் மிதந்து கொண்டிருந்தன. ஆள் நடமாட்டம் சற்றே அதிகரித்திருந்தது. எல்லாம் வெகு வேகமாய்ப் பின்னுக்குப் போய்க் கொண்டிருந்தன.

ரிஸர்வ் பாங்க் கட்டிடம் தாண்டியதும் வேகத்தைச் சற்றுக் குறைத்தாள்.

மௌனம்.

இப்போது அவள் பார்வை ரஸ்தாவின் மேலேயே இருந்தது.

பத்து நிமிடங்களுக்குள் அவர்கள் கிளைவ் பாட்டரியைத் தாண்டி திருவொற்றியூர் வழியில் சென்று கொண்டிருந்தனர்.

கட்டிடங்கள்... மனிதர்கள். மீண்டும் கடற்கரை.

மீனவர்கள் கோவணாண்டிகளாக, தக்ளியில் நூற்றுக் கொண்டிருந்தனர். "இன்னும் சில நிமிடங்களில் கல்யாணச் சத்திரம் வந்துவிடும்!" — அவன் சொன்னான்.

அவள் காரை ஒரு ஓரமாக நிறுத்தினாள். அந்தப் பகுதியில் ஆள் நடமாட்டம் குறைவாகவே இருந்தது. கடற் காற்றுஜில் லென்று வீசியது.

"நீங்க என்ன செய்யறீங்கன்னு நான் இதுவரை கேட்கவே இல்லை!"

"உத்தியோகம்னு ஒண்ணு இருக்கு! ஊர் ஊராப் போயாகணும்!"

சிறிது மௌனம். பிறகு அவள் பேசினாள்:

"டார்லிங்! இப்படிக் கூப்பிடறதுக்கு எனக்கு உரிமை இல்லை. இருந்தாலும் கூப்பிடறேன். உங்களை நான் அடிக்கடி நினைப்பேன். என்னுடைய பண வெறி, ஸ்டேட்டஸ் வெறி இதெல்லாம் அர்த்தமில்லாததாத் தோணும். நினைவிருக்கா! ஒரு நாள் காலை நீங்க, அந்த ராம்நாராயண் கம்பெனியிலே நாம ரெண்டு பேரும் வேலை பார்க்கிறப்போ என்னை முத்தமிட்டீங்க! ஓ! இப்ப நினைச்சாக் கூட உடம்பு புல்லரிக்கிறது. போகட்டும். அடுத்த பிறவின்னு ஒண்ணு இருக்கா? அப்படி இருந்தா அதிலேயாவது நாம ரெண்டு பேரும் கணவன் மனைவியா ஒன்று சேருவோம். நீங்க திருமணம் செஞ்சிக்கிட்டுக் குடும்பத்தோட வாழணும். எனக்காக நீங்க உங்க வாழ்க்கையைப் பாழாக்கிக்கிறது அர்த்தமில்லாத காரியம். டியர் யூ பிராமிஸ் மீ!" அவள் வலது உள்ளங்கையை அவன் தொடை மீது வைத்தாள்.

அவன் சற்றுத் தயங்கினான்.

"உன் வாழ்க்கை எப்படி இருக்கணும்னு நீ தீர்மானிக்கிற மாதிரி என் வாழ்க்கை எப்படி இருக்கணும்னு நான்தானே தீர்மானம் பண்ணணும்?"

"நோ முரளீ! அப்படியெல்லாம் சொல்லாதீங்க. ஒரு பாவமும் அறியாத, நல்ல இதயம் உள்ள ஒரு மனிதரோட வாழ்க்கை வெறும் பாலைவனமாக ஆக நான் காரணமாக இருந்தேன்கிற எண்ணம் என்னை வாட்டி வதைக்கும். வெளி உலகத்துக்கு நான் சந்தோஷமா இருக்கிறதாக் காட்டிக்கிறேனே தவிர, உண்மையிலே சந்தோஷம் இல்லே. பகைவனை வெற்றி கொண்ட பிறகும்கூட. நினைச்சுப் பார்க்கும்போது எல்லாமே ஒரு பொய்த் தோற்றமாத்தான் தெரியுது. வெங்காயத்தைத் தோலுரிச்சுப் பார்த்தா கடைசியிலே ஒண்ணுமே இருக்காதும்பாங்க. அதே போல்தான் எனக்கு வாழ்க்கையும் தோன்றது. இட் ஹேஸ் நோ மீனிங்! ஆனா வாழ்ந்து தீரவேண்டியிருக்கு வாழறேன். ப்ளீஸ்! பிலீவ் மீ! ஐ ஸ்டில் லவ் யூ!"

அவள் இப்பொழுது எந்தவிதப் பெரிய மனுஷத்தனமும் இல்லாமல் அழுதாள். அவன் தோளில் தன் தலையைச் சாய்த்துக் கொண்டு மௌனமாகக் கண்ணீர் உகுத்தாள்.

முரளியின் இதயத்தை அவளுடைய நேர்மையான பேச்சு பிசைந்து எடுப்பது போல் இருந்தது. உஷ்ணமான அவளுடைய கண்ணீர்த் துளிகள் அவன் வலது தோளை நனைத்தன.

மெதுவாக அவன் மோவாயைத் தொட்டு அவள் முகத்தைக் கையில் ஏந்தியவாறு, விழிக் கடையில் முத்துக்களாய்க் கோத்து நின்ற நீர்த் துளிகளைத் துடைத்து எறிந்தான்.

"நான் திருமணம் செஞ்சிக்கிறேன். ஐ பிராமிஸ் யூ!"

அவள் உதட்டில் ஒரு புன்னகைக் கீற்று தோன்றி மறைந்தது. மௌனமே ஒரு பாஷையாகப் பரிமாறிக்கொள்ள அந்த இரு உள்ளங்களும் பரஸ்பரம் புரிந்துகொண்ட ஒரு நிலைமையில் கார் சென்றது. அடுத்த சில நிமிடங்களில் அவன் கல்யாணம் நடக்கும் சத்திரத்துக்கு வழி காட்ட, கார் அதன் முன்பு நின்றது. அவன் இறங்கிக்கொண்டான். காரைத் திருப்பிக் கொண்டாள்.

மெல்ல, புன்னகைத்தவாறே அவன் கையை ஆட்டி விடை பெற்றாள். சில வினாடி நேரம் மௌனமாக நின்ற அவன், நண்பன் ராஜாமணியின் திருமண வைபவத்தில் பங்கு கொள்ள உள்ளே நுழைந்தான்.

(முற்றும்)

**போகிறவழிக்குப் புண்ணியம்**

நாம் காசியில் இறந்தால் மறு பிறவி இல்லை என்று கருதுகிறோம். ஆனால் நேபாளதேசத்தில் உள்ளவர்கள் கோவில் வாசலில் இறந்தால் மறு பிறவி இல்லை என்று முழு மூச்சாக நம்புகிறார்களாம். ஆகையினால் சாகும் தறுவாயில் உள்ளவர்களையெல்லாம் தூக்கிக் கொண்டு போய்க் கோவில் வாசலில் படுக்க வைத்து விடுகிறார்களாம்.

வி.எஸ்.கே. மூர்த்தி

# அரிவாள்-சுத்தியல்-நட்சத்திரம்!





எட்டு மணிக்கு ஃபாக்டரி!

ஏழரை மணிக்கு ராஜதுரை அட்மினிஸ்டிரேட்டிவ் ஆபி சில் இருந்தான். கம்பெனி கொடுத்த காக்கி அரைக்கால் சட்டை, காக்கி மேல் சட்டை. சட்டையில் மூத்திர நாற்றம். இளம்புஇறபோது . கோவிந்துக் குட்டிசெய்தஅபிஷேகம்! அவ னுக்கு மட்டுமே கிளர்ச்சியூட்டு கிற வாசம். குறுக்கு வழி என்று வயலிலும் வரப்பிலும் புகுந்து வந்திருப்பதில் வேலிக் காத்தான் முட்கள் முழங் கால் வரை கீறியிருந்தன. சுற்றிலும் பயிர் நம்பிய ஊருக் குச் சற்று ஒதுக்குப்புறமாய் இந்த ஃபாக்டரி.

பர்ஸனல் மானேஜருக்கு பி. ஏ. டை கட்டிச் சுழல் நாற்காலியில் உட்கார்ந்திருந் தார்.

''என்ன வேணும்?''

கரகரவென்ற குரல். கீழே தரையின் கம்பளி காலை உறுத் திற்று. மேஜைக் கண்ணாடியின் பளபளப்பை லேசாய்த் தொட்டதில் அழுக்கு ரேகை பதித்துக் காட்டிக்கொடுக்க ராஜதுரை பயந்துபோய்க் கை களை எடுத்து மார்பில் கோத் துக் கொண்டான்.

''அய்யாதான் வரச் சொன் னீங்களாம்.''

''உன் பேரு?''

''ஏ. ராஜதுரைங்க....''

''பிளாக்ஸ்மித் ராஜ துரை?''

''ஆமாங்க....''

''காஷுவல்தானே...''

''ஐயா....?''

''டெம்பரரி வேலை தானேய்யா?''

''ஆமாங்க.....''

கொஞ்சம் தயங்கி விட்டுச் சொன்னார்:

''கீழ ஆபீஸ்ல போய் உன் பேரைச் சொல்லு.... பதினேழுக நான் சம்பளம் கொடுப்பாங்க... வாங்கிட்டுப் போ. வேலைக் குப் போக வேணும்....''

''வேலேங்க....?''

''அவ்வளவுதான்வேலை... முடிஞ்சு போச் சிய்யா... இனிமே அடுத்த கான்ட்ராக்ட் வந்தா பேப்பர்லே அனௌன்ஸ் பண்ணுேம். வரலாம்.''

திடீரென்று பிடரியில் அறை விழுந்த மாதிரி இருந்தது. ராஜதுரைக்குத் தொண் டையை அடைத்துக் கொண்டது.

''அய்யா....'' என்கையில் நாத் தழு தழுத்தது. ''திடீரென்று இப்படி செய்ஞ்சா நாங்க எங்க போவோங்க? என் ராசாவை எப்படி யெல்லாமோ முன்னுக்குக் கொண்டு வரணும்னு ஆசைப்பட்டுக்கிட்டிருக்கேங்க. இந்தச் சமயத்தில் வேலை இல்லேன்னு வயித் தைக் கவனிக்கிறதே கஷ்டமாப் போயி டுங்க.....''



## சுபா

அவன் கஷ்டத்தை யெல்லாம் கேட்டு ஆறுதல் சொல்லிக் கொண்டிருக்க பி.ஏ. வுக்கு நேரமில்லை.

"அவ்வளவுதான்..." என்றான் ராஜதுரை பையிலிருந்து பணத்தை எடுத்து நீட்டிக் கொண்டே.

சண்பகம் அவனை ஏறிட்டுப் பார்த்தாள்.

"இனிமே என்ன செய்யறதாம்?" ஏக்கக் கேள்வி கொஞ்சம் முனகலாய் வந்தது.

"எனக்கும் தெரியலே சண்பகம்... நாலு எடத்திலே சொல்லி வச்சிருக்கேன்.. பார்க்கலாம்னு சொல்லி யிருக்காங்க...."

"இந்த நூற்றம்பதை வச்சிக்கிட்டு என்ன பண்றது... அத்தைக்கு இப்பவே மூச்சு ஒரே இழுப்பா இழுக்குது... குளிர் காலம் வந்தா அந்தச் சிக்குக்கு வேற வைத்தியம் பார்த்தாகணும்..."

ராஜதுரை ஒன்றும் பேசாமல் பின் கதவைத் திறந்து கொண்டு புழக்கடைப் பக்கம் போனான். கொல்லையில் நான்கைந்து பன்றிகள் 'உர்ரக்' 'உர்ரக்' என்று மேய்ந்து கொண்டிருந்தன. வாழை மரத்தடியில் கொட்டியிருந்த அடுப்புச் சாம்பலின் மேல் கைகழுவிக் கொண்டபோது அது குப்பென்று மேலெழும்பிற்று.

"அப்பா...."

"கோவிந்துக்குட்டி... எங்கே போயிட்டு வர ராசா...."

தத்தக்கா பித்தக்காவென்று நடை வைத்துக் குழந்தை ஓடி வந்து முழங்காலைக் கட்டிக் கொண்டது. தூக்கிக் கொண்டான். கன்னத்தில் அழுந்தி முத்தமிட்டான்.

"வெளியே போயிருந்தியா... யாருகூடப் போனே?"

குழந்தை வாசல் பக்கம் கை நீட்டிற்று. கிழவி நின்றிருந்தாள்.

''என்னடா ராஜதுரை... வேலை இல்லியாமே....'' என்றாள் கிழவி.

பதில் சொல்லாமல் ''ஆயா கூடவா போனே?'' என்று குழந்தையைக் கேட்டான்.

குழந்தை மேலும் கீழுமாகத் தலையை ஆட்டிற்று.

''வேலை போயிடிச்சாமேடா...'' என்றாள் கிழவி மறுபடியும்.

''என்ன செய்யிறது... போய்டிச்சி... கஷ்டப்படணும்னு இருக்கு... அனுபவிக்கறேன். என் ராசா இருக்கான்ல... அவன் வளந்து நல்லாப் படிச்சி, பெரிய துரை மாதிரி பாண்டும், சூட்டும் போட்டு வேலை பாப்பானில்ல... என்னையும் உன்னையும் சண்பகத்தையும் ஒக்கார வச்சி சோறு போடுவானில்ல.... என்ன ராசா?'' குழந்தை புரியாமல் தலையை மேலும் கீழுமாய் ஆட்ட 'பச்சக்' என்று மறுபடியும் கன்னத்தில் முத்தமிட்டான்.

''சாப்புட வரீங்களா?''

ராஜதுரை நடுக் கூடத்தில் அமர்ந்து கொண்டு, குழந்தையை மடியில் இருத்திக் கொண்டான்.

மூட்டை விளக்கு லேசாய் ஒளி சிந்திக் கொண்டிருந்தது. கிழவி கூடத்து மூலையில் சுருண்டிருந்தாள். கோவிந்துக் குட்டி 'ஏணை'யில் தூங்கிக் கொண்டிருந்தது. சண்பகம் இன்னும் நெருங்கிப் படுத்துக் கொண்டாள். கிழவி சுவரைப் பார்த்து முகம் திருப்பிப் புரண்டு கொண்டாள்.

**''பனி - விடை''**

தமிழ்ப் பனியில் தெலுங்குப் பணி செய்து மலையாளப் பனி வந்து விட்டது. — இதன் பொருளென்ன?
தமிழில் பனி — குளிர்.
தெலுங்கில் பணி — வேலை.
மலையாளத்தில் பனி — காய்ச்சல்.
குளிரில் வேலைசெய்து காய்ச்சல் வந்து விட்டது என்பதே பொருள்!
ஜி. செல்வராஜ்

''அப்புறம் யோசிக்கப் பார்த்தீங்களா?''

''எதை?'' என்று கேட்டு அவள் முதுகில் கையை வைத்து வருடி விட்டான்.

''அது சரிதான்... இப்படி விட்டேத்தியா இருந்தா என்ன அர்த்தம்? அறுப்புக்கு ஆள் கொறையுதுன்னு மேலப்பட்டிக்காரர் சொன்னதா அம்மா சொல்லலே?''

''போகலாங்கிறியா சண்பகம்?''

''சும்மா வீட்ல உக்காந்தா இந்தா வச்சுக்கன்னு யாராச்சும் ரெண்டு பணம் தரப் போறாங்களா... பன்னெண்டு ரூபாயாமில்ல போய்ட்டு வருவோம்...''

''நீ கூடவா....?''

''பின்னே... உடம்பில வலு இருக்குது. நானும் ரெண்டு பணம் சேக்கறேன்... நம்ம ராசாவை இஸ்கூல்ல சேக்க வேணும்?''

''எத்தனை நாளைக்கு இந்த அறுப்பு வேலை?''

''எத்தனை நாளைக்கு இருக்குதோ அத்தனை நாளைக்கு... அறுப்பு முடிஞ்சா என்ன அப்புறம் நடவுக்கு... மருந்தடிக்கிறதுக்கு.. வேலையா இல்ல...?''

''மேலப்பட்டியில ஆள் குறையுதாமா?''

''அது ஏதோ தகராறு போல... கூலி ஜாஸ்தி வேணுமின்னு கேக்கறாங்களாம்... இருவதுக்குக் கீழே வரமாட்டேன்னு அடம் புடிக்கிறாங்களாம்....''

''அப்படி இருக்கச்சே நாம போனா எப்படி சண்பகம்?''

''நாளைக்கே இன்னொரு பிள்ளை பொறந்திருச்சுன்னா...? அதுகளை நாமதானே தாங்கணும்... யாவணும்... அதுக்கு வழி பாப்பீங்களா..''

சொல்லிவிட்டு அவன் விரல்களோடு விரல் கோத்துக் கொண்டு லேசாய் நெறித்தாள். சட்டென்று அவளை இழுத்து அணைத்துக் கொண்டான் ராஜதுரை.

''நாளைக்குப் போலாம்....'' என்று அவள் காதில் முனகினான்.

காலையில் எழுந்தவுடன் கருகருப்பாய்ச் சாம்பல் எடுத்துப் பல் தேய்த்தான். சண்பகம் அவனுக்கு முன்னாலேயே எழுந்து குளித்திருந்தாள்.

''என்ன குளிச்சிட்டே....? சாயங்காலம் வந்து குளிச்சிக்கக் கூடாது?''

''ஆமா... இதுக்கெல்லாம் சொல்லிட்டு இருக்கணும்....'' என்றாள் லேசான வெட்கத்தோடு.

கிழவி மூலையில் உட்கார்ந்து கொண்டு, நமுட்டுச் சிரிப்பாய்ச் சிரித்துக் கொண்டு பேரனுக்கு விளையாட்டுக் காட்டிக் கொண்டிருந்தாள்.

ராஜதுரை அதற்கு மேல் ஒன்றும் பேசாமல் புழக்கடையில் குளிப்பதற்குப் போனான். குளித்து விட்டு வந்து கலக்கி வைத்திருந்த பழையதைச் சாப்பிட்டுவிட்டுக் கலயத்தைக் கழுவி வைத்தான்.

''நாங்க போயிட்டு வரட்டுமா அத்தை?''

''மவராசியா போயிட்டு வாம்மா. அவன் மட்டும் போவட்டும்னேன்... வெயில்லபோய் நின்னு ஒன் உடம்பு என்னத்துக்கு ஆவும்?''

''ஒண்ணும் ஆவாது அத்தை... நீங்க ஊட்டைப் பாத்துக்குங்க....''

மேலப்பட்டியில் இன்னும் நிறைய ராஜதுரைகளும், சண்பகங்களும் அண்டையிலிருந்து வந்து சேர்ந்திருந்தனர்.

''எந்த ஊரு....?''

மேலப்பட்டி மிராசின் கணக்குப்பிள்ளை மிடுக்காகக் கேட்டார்.

''கீழப்பட்டுங்க.''

''ரெண்டு பேரும் வயல்ல எறங்கறீங்களா? பன்னெண்டு ரூவாதான் கூலி...''

''சரீங்க...''

''சரி போய் அரிவா எடுத்துக்குங்க...''

ஒரு சின்னக் குழுவாய் அவர்கள் வயலில் இறங்க முற்படுகிறபோது சரேலென ஒருவன் குறுக்கே குதித்தான்.

''வயல்ல எறங்கிடுவீங்களா?''

வழிமறித்தவனை ஏறிட்டுப் பார்த்தான், ராஜதுரை. ஒற்றை ஆளாய்த் திருவிழாத் தேரை இழுக்கக் கூடியவன் போலத் திடகாத்திரமாய், அகலமும் உயரமுமாய் காலை

# உங்கள் குழந்தைக்கு 3 மாதம் ஆகி விட்டதா?

அவனுக்குத் தேவையான இரும்புச்சத்து
பாலிலிருந்து மட்டும் கிடைப்பதில்லை.



## அவனுக்கு அளிப்பீர் இரும்புச்சத்து நிறைந்த :.பாரெக்ஸ்

''தாயிடமிருந்து ஏராளமான இரும்புச் சத்தைப் பெற்று குழந்தை பிறக்கிறது. பிறந்த பிறகு மெல்ல மெல்ல இரும்புச் சத்தின் அளவு குறையத் தொடங்குகிறது. பால் நல்ல உணவாயிருப்பினும் இரும்புச்சத்துப் பற்றுக் குறையினால் அது முழுமையாவதில்லை. ஆகவே, குழந்தைக்கு இரும்புச் சத்து அடங்கிய திட உணவு தேவைப் படுகிறது''.
டாக்டர் சுபாஷ் C. ஆர்யா.




டாக்டர்கள் சிபாரிசு செய்வது—

**:.பாரெக்ஸ்**

CASGLF-32-203 TAM

அகற்றி நின்றிருந்த தோரணை வயிற்றில் கிலி கிளப்பிற்று. அக்கறையோடு வளர்த்த மீசை ஆட்டுக் கொம்புகள் போல் இரு புறமும் வளைந்து பாதிக் கன்னத்தை மறைத்தது.

''புள்ளைக் குட்டிக்காரங்கய்யா நாங்க...'' என்றான் இவர்களில் ஒருவன்.

''எங்களுக்கு மாத்திரம் புள்ளை குட்டி இல்லையா?... இருவது கொடுத்தா பரம்பரை சொத்தே அழிஞ்சிடற மாதிரில்ல மிராசு குதிக்கிறான்... வேற ஊர் ஆளுங்களை வக்கலாம்னு பாக்கறான்... நீங்க எறங்கிடுவீங்களா? எறங்குங்க பாப்போம்... அப்புறம் காலும் கையும் துண்டு துண்டாப் போயிடும்....''

''அப்படீல்லாம் பெரிய வார்த்தை பேசாதீங்கய்யா... பசிக்குத்தானே வேலை..... ஒழைக்கிறதுக்குத்தானே கூலி... இந்தப் பொழப்பும் இல்லேன்னு நாங்க மண்ணைத் தான் திங்கணும்...'' என்றான் ராஜதுரை.

''இன்னு... உங்க ஊர்லபோய் என்னவோ செய்ங்க... இங்க ஏன் வரே?''

ராஜதுரை சண்பகத்தைப் பார்த்தான்.

''போங்கடா...'' என்று அவன் பெரிதாய் அதட்டினான்.

சட்டென சில அரிவாள்கள் பூமியில் போடப்பட்டன. கால்கள் பின்வாங்கின. சிலர் விலகிக் கொண்டார்கள்.

''போயிடலாங்க....'' என்று கெஞ்சினாள் சண்பகம்.

ராஜதுரை அரிவாளைக் கீழே போடப் போகிற சமயம் தூரத்தில் ஜீப் வருகிற சப்தம் கேட்டது. போலீஸ் ஜீப். வழி மறித்தவனும், கம்பும் கழியுமாய்க் கூட இருந்தவர்களும் சிட்டுக் குருவியானார்கள்.

''நீங்க எறங்குங்க...'' என்று கணக்குப் பிள்ளை அதட்ட ராஜதுரையும், சண்பகமும் எஞ்சி நின்றவர்களும் இறங்கினார்கள்.

பன்னிரெண்டு ரூபாய்!

குதிரை முன் காட்டிய முள்ளங்கியாய் மனத்தில் உற்சாகத்தைப் பெருக்கியிருந்தது. கை அரிவாளில் வேகம் காட்டியது.

உச்சியில் சூரியன் தகிக்கிற வரை ஒரு போலீஸ் தலை இங்கும் அங்குமாய் நடை பயின்று காவல் நின்றது. அப்புறம் கணக்குப் பிள்ளையின் மேற்பார்வை மட்டும்தான். வீட்டிலிருந்து கொண்டு வந்த பழையது கலக்கலை மதியம் சரித்துக் கொண்டு மீண்டும் வயலில் இறங்கினார்கள். சுத்தி பிடித்து முழு பலத்தையும் பிரயோகித்துப் பழக்கமாயிருந்த கை முதலில் கொஞ்சம் ஒத்து வராமல் அப்புறம் அரிவாளை லாகவமாய் வீசப் பழக்கப்பட்டுப் போனது.

சூரியன் ரத்தத்தைப் பூசிவிட்டு அன்றைப் பொழுதுக்குச் செத்துக் கொண்டிருக்க, சின்ன ஓடையில் கால் கழுவினார்கள். முகம் கழுவினார்கள். சண்பகத்தின் உள்ளங்கை சிவந்து எரிச்சல் கண்டிருந்தது.

ராஜதுரைக்குக் கண்ணில் இரக்கம் சுரந்தது.

''நாளேலேர்ந்து நீ வர வேணாம் சண்பகம். கை எப்படிக் காய்ச்சுப் போச்சு...'' என்று ஆதரவாய் அதை வருடினான்.

''பின்னே...? என்னால முடியுங்க... ரெண்டு பேராச் செய்தாத்தான் நாலு பணம் பார்க்க முடியும்... நம்ம ராசாவுக்குச் சட்டை டாயர் வாங்கணுமின்னீங்களே...''

''ஆமா சண்பகம்... அவனை நல்லா ஆளாக்கிப் பெரிய ஆபீசராக்கணும்... வயசான காலத்துல நம்பளை உக்காத்தி வச்சுச் சோறு போடப் போற பிள்ளையாச்சே...''

ராஜதுரைக்கு உடலில் லேசாய் அலுப்புதான் இருந்தது. போய்ச் சாப்பிட்டு, கோவிந்துக் குட்டியைக் கொஞ்சிவிட்டு சண்பகத்துக்குப் பக்கத்தில் பாய் விரித்தால் எல்லாம் சரியாய்ப் போகும்.

''நாளைக்கு இன்னும் கொஞ்சம் காலமே வந்துருங்க...'' என்று பணத்தை எண்ணிக் கணக்குப்பிள்ளை நீட்டியபோது அதிக சந்தோஷமாய் இருந்தது.

மற்றவர்கள் வழி பிரிய சண்பகத்தின் கை கோத்தபடி ஊர்ப் பக்கம் நடந்தான்.

**டெலிவரி குறைந்து விட்டதே!**

ஞாயிற்றுக்கிழமைகளில் தபால் பட்டுவாடா செய்வதும் எக்ஸ்பிரஸ் டெலிவரி முறையும் போய் விட்டன. ஓவர் டைம் அதிகமாக கேட்பதால் இனி விடுமுறை நாட்களன்று ஒருவேளை பட்டுவாடா கூடக் கிடையாதாம். பொது மக்களுக்கு விடுமுறை நாளில் ஒரு தரமாவது கடிதங்கள் கிடைக்கத் தபால் இலாகா ஏதாவது வழி செய்வார்களா? தபால் ஆபீசுக்குப் போயாவது நாம் வாங்கிக்கொள்ள வசதி செய்யலாமே?

—என். பங்கஜம்

திடீரென்று ஒரு பெரிய மரத்தின் பின்னாலிருந்து அவர்கள் வெளிப்பட்டார்கள். அந்த முரட்டு மீசை நடு நாயகமாய் நின்று கண் சிவந்திருந்தான். உணர்வுகள் துரித கதியில் இயங்கின. பயத்தில் கால் பின்னியபோதும் சண்பகத்தை இழுத்துக் கொண்டு வந்த வழியே ஓடுவதற்கு ராஜதுரை திரும்பிய போது அரிவாளின் முதல் வெட்டு அவன் கழுத்தில் ஆழமாய் இறங்கியது. கொப்புளித்த ரத்தம் சண்பகத்தைத் தாக்கி, அவள் அலறு முன் அடுத்த வெட்டு அவள் வயிற்றில் சீறி இறங்கிற்று. கோர்த்த கை பிரிந்து இருவரும் சரிந்து மடங்கிப் பூமியில் உடல் பரத்தினார்கள்.

**வீ**ட்டில் கிழவி சமைத்திருந்த களைப்பில் தலைக்குக் கையை முட்டுக் கொடுத்து தூங்கிக் கொண்டிருந்தாள். ராஜதுரை—சண்பகத்தின் அந்த நம்பிக்கை நட்சத்திரம் கையில் ஒரு பனை ஓலை ஏழுகிலுப்பையோடு விளையாடிக் கொண்டிருந்தது.

ஆகஸ்டு 31 மணிலாவில் மாக்ஸாய்ஸாய் விருது (ஒரு லட்சத்து அறுபதாயிரம் ரூபாய் பெறுமானம்) பெறுகிறார், இந்தியன் எக்ஸ்பிரஸ் நிர்வாக ஆசிரியர் அருண் ஷோரி. அரசாங்க, அரசியல் ஊழல்களையும் மெத்தனத்தையும் மனிதத் தன்மையற்ற அதிகார மமதைகளையும் அம்பலத்துக்குக் கொண்டுவந்து சாடும் இந்தத் தீரரைக் கல்கி வாசகர் சார்பில் பாராட்டி உரையாடியபோது:



அருமைத்துணைவி அனிதாவுடன்

# பொது ஊழலைப் போக்க ஒரு டாக்டர்

“இவர்தானா? இந்தப் பகவா!” என்ற பிரமிப்புத்தான் முதலில் நமக்கு எழுகிறது, அருண் ஷோரியைப் பார்க்கும்போது. ஆறுவைப்பட்ட மகாராஷ்டிர முதலமைச்சர் அந்துலேயின் சிமெண்டு விவகாரங்களை அம்பலப்படுத்தியவர்; அதன் காரணமாக பார்லிமெண்டுடன் தனி மனிதராக மோதிச் சவாலில் வென்றவர்; பீகார் முதலமைச்சர் ஜகந்நாத மிஸ்ராவுக்கு என்றும் சிம்ம சொப்பனமாக இருப்பவர்; எண்ணெய் பேரத்தில் இந்திய அரசு ஏமாளியான வயிற்றெரிச்சலை எடுத்துச் சொல்லி பார்லிமெண்டைக் கலக்கியவர் இந்த அருண் ஷோரி என்று அறிவோம். எனவே அவரைப் பற்றி எந்தவிதமோ கற்பனை செய்துகொண்டு போனால், ஏமாற்றத்துக்கு தயாராக இருக்க வேண்டும். ஒல்லியாக, அதிக உயரமில்லாத இவர் நடையிலே ஒரு சுறுசுறுப்பு தெரிகிறது. குரலிலே அதிகாரமில்லை. பேச்சிலே எதையோ சாதித்துவிட்ட பெருமை சற்றும் இல்லை. இயல்பான பண்பு நடத்தையிலும் பேச்சிலும் புலப்படுகிறது. நிறையப் படித்த, தெளிந்த சிந்தனையாளரிடம் பேசுவதை உணர்கிறோம். ஆனால் படிப்பாளியின் கர்வம் இல்லாமல் பாமரர்களிடம் பரிவாக விஷயங்களை எடுத்துச் சொல்லும் போதனையாளர் போலத் தோன்றுகிறார்.

பாராட்டுக்களை அடக்கமாக ஏற்றபடி மன்னிப்புக் கேட்கிறார்: “சாரி. வெகு நேரமாகக் காத்திருக்கிறீர்களா? மருந்துக்-கடைக்குப் போய் ஐந்து நிமிஷத்தில் வந்துவிடலாம் என்று வெளியே புறப்பட்டேன். அம்மாவுக்குக் கண் மருந்து ஒன்று வேண்டியிருந்தது. இந்தப் பேட்டையில் இல்லை. வசந்த் விஹாரில் இல்லை. சுற்றியதில் நேரமாகிவிட்டது. என்னதான் சுதந்திர தினம் என்றாலும் இப்படியா மருந்துக் கடையைக் கூட மூடிவிடுவது!” — ஐஸ் க்யூப் போட்ட கோலாவைக் கொடுக்கிறார்!

“இன்றைய இளம் பத்திரிகையாளருக்கு நீங்கள் ஓர் ஆதர்ச மனிதர்” என்று பாராட்டினால், அதை ஏற்க மறுக்கிறார். “நான் ஒரு பத்திரிகையாளனே அல்ல” என்கிறார், மூன்று ஆண்டுகளுக்கு முன் பத்திரிகையாளராகி இன்று அந்தத் துறையின் முன்னணிக் குழு ஒவ்வொன்றிலும் அங்கத்தினராகியுள்ள அருண் ஷோரி.

கொஞ்சம் பணக்காரத்தனமாகத் தெரிந்த பங்களாவைப் பற்றி நம் வியப்பைத் தெரிவித்தால் அவர் சிரிக்கிறார். “பதினைந்து

ஆண்டுகளுக்கு முன் அப்பா இந்த இடத்தை வாங்கினாரோ நாங்கள் தப்பினோம். இப்போது தங்க ஒரு கூரை இருக்கிறது. இந்த ஊரில் வாடகை கொடுத்துக் கட்டுப்படியாகாது. நிலமோ வீடோ வாங்குவதும் இன்று யாருக்கும் சாத்தியமில்லை. அன்று இந்த அத்வானத்தில் வீடு வாங்குகிறாயே என்று அப்பாவை எல்லோரும் பரிகாசம் செய்தார்கள். இன்று இந்தப் பேட்டை ஒரு மையமான பகுதியாகி விட்டது'' என்கிறார். சுவரில் உள்ள வண்ண ஓவியங்கள் தமது தந்தையின் கைவண்ணம் என்று பெருமையுடன் கூறி நம்மைப் பெரியவருக்கு அறிமுகப்படுத்துகிறார்.

ஐ. ஏ. எஸ். தந்தையார் ஷோரி பஞ்சாபில் பல இடங்களில் மாற்றலாகி வந்தபோது சிறுவன் அருண் தில்லியில் ஹாஸ்டலில் தங்கிப் பள்ளிப் படிப்பும் செயின்ட் ஸ்டீபன் கல்லூரியில் பட்டப் படிப்பும் பெற்றான். கல்லூரி ஹாக்கி டீம் காப்டன். அந்த டிரிம்னெஸ் இன்னும் நடையில் தெரிகிறது. தந்தையாருக்கு ஐக்கிய நாடுகள் சபையில் வேலை கிடைத்தது. அருண் நியூயார்க் சைரக்யூஸ் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து பொருளாதாரத்தில் பி. எச். டி. உயர் படிப்பு பெற்றார்.

நவம்பரில் நாற்பத்தொரு வயது நிறையும் அருண்ஷோரி, இருபத்தாறு வயதில் டாக்-



அன்னையின் ஆசி

டர் பட்டம் பெற்று இந்தியா திரும்பியதும் அடுத்து என்ன செய்யலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தபோது அத்தை இவருக்குப் பெண் பார்த்து வைத்திருந்தார்! ''திருமண எண்ணமே இல்லாதபோதிலும் அனிதாவுடன் அரை மணி பேசியவுடன் இவளே என் துணைவி என்று இசைந்தேன். என் வாழ்க்கையில் நேர்ந்த எதிர்பாராத அதிர்ஷ்டமான ஒரு திருப்பம் இது.'' என்று புன்னகைக்கிறார். திருமணமான உடனே வாஷிங்டனில் உலக பாங்கியில் பொருளாதார நிபுணராக வேலை பார்க்கும் வாய்ப்பு கிடைத்தது. ஒரே மகன் ஆதித்யா பிறக்கும்வரை வாஷிங்டனில் குடித்தனம் நடத்தினார்கள். பிறந்த குழந்தை 'செரிப்ரல் பால்சி' என்னும் ஒரு வகை வாதத்தில் நோய்ப்பட தாய்நாடு திரும்பி விட்டார்கள். ஏழுவயதாகும் ஆதித்தன் ஒரு 'ஸ்பாஸ்டிக்'. கைகால் அசைவுக்கு ஏராளமான பயிற்சிக் கருவிகள்.

பெற்றோர் காட்டும் அசாத்தியமான பொறுமையும் அளவில்லாத அன்புமே அந்தக் குழந்தையின் முகத்தில் ஆனந்தம் மலரக் காரணம். திருமதி அனிதா ஷோரி இதன் காரணமாகவே ஸ்பாஸ்டிக் பள்ளிக்கூடம் ஒன்றில் பணி புரிகிறார். குழந்தையைக் குணப்படுத்த இந்தியாவிலும் வெளி நாடுகளிலும் பல வைத்தியசாலைகளுக்குச் சென்று வைத்திய முறைகளைத் தெரிந்து அவனுக்குப் பயிற்சி தருவதே இப்போது இவர்களின் முதல் கடமையாக இருப்பதை உணர்கிறோம்.

சிறுவனிடம் நம்மை அழைத்துப் போகிறார் அருண். இரவு உணவை அவனுக்கு ஒரு தாதி ஊட்டிக் கொண்டிருக்கிறார். 'அங்கிளுக்கு அறிமுகம் செய்து அவனுடன் பேச்சு கொடுத்து அன்று மாலை அவன் ஐஸ்கிரீம் சாப்பிட்டதைத் தெரிந்து குதூகலமாகச் சிரித்து அவன் கையை எடுத்துக் கொஞ்சியபடி ஒரு முத்தம் கொடுக்கிறார். அந்தச் சிறு அறையில் சைக்கிள் போல சில பயிற்சிக் கருவிகள், குழந்தை விளையாட்டுச் சாமான்கள். ''இறைவன் வழங்கிய வரத்தில் இது என்ன சோதனை'' என்று நம் மனத்தில் வேதனை அடக்க முடியாமல் எழுகிறது. பரிதாபமோ அனுதாபமோ எதற்கு? தீரமாக நோயை எதிர்த்து வாழும் ஓர் அழுத்தமான நம்பிக்கை நிறைந்த ஆண்மையை அங்கே தரிசிக்கிறோம். அவர்களுக்காக நம்மை அறியாமலே நெகிழ்ந்து பிரார்த்தனை செய்கிறோம்.

நாட்டையும் சமூகத்தையும் பிடித்துள்ள நோய்களையும் இதே உறுதியுடனும் நம்பிக்கையுடனும்தான் அருண் ஷோரி தாக்கிப் போக்க முயல்கிறார் என்று நமக்குத் தோன்றுகிறது. பேச்சுக் கொடுக்கும்போது அவர் எப்படி பத்திரிகைக்காரரானார் என்று தெரிவிக்கிறார். வாஷிங்டனிலிருந்து இந்தியா திரும்பிய பிறகு (வயது 34) இந்திய வரலாற்றுத் துறை ஆராய்ச்சிக் கழகத்தில் ஓர் உபகாரச் சம்பளம் பெற்று மாணவர் போல் உழைக்கும் ஆராய்ச்சியாளராகப் பதிவு செய்து கொண்டார். அந்தக் காலத்தில் இவர் படித்தவை ஏராளம். (அப்போது தொடங்கியவை இன்னும் தொடர்கின்றன) உபநிஷதம், பிரும்ம சூத்திரம், பகவத்கீதை ஆகியவற்றை இன்றைய நிலையில் விளக்கும் வகையில் அப்போது ஆராய்ச்சி மாணவராக ஒரு புத்தகம் எழுதினார். ''அப்போது எனக்கு ஒரு தெளிவு பிறந்தது. என் வாழ்க்கை நோக்கம் என்ன என்று புலப்பட்டு விட்டது. மனித குலத்தின் சிந்தனைகளைத் தொகுத்து ஆராய்ந்து எழுத முனைந்தேன். ஐந்து பெரிய புத்தகங்களுக்கு அஸ்திவாரம் போட்டிருக்கிறேன். குரான் மற்றும் முகமதிய மரபுகள் பற்றி அடுத்த நூல் தயாரித்து வருகிறேன். இந்து கொள்கைகள் பற்றி மூன்றாவது. வெளியும் மாறுதலும் (Space and change) என்பது நான்காவது. புனரமைப்பு என்பது ஐந்தாவது. இவற்றைத் தயாரிக்க எத்தனை நாள் ஆகுமோ. ஆனால் ஒன்று. ஒரு வேலை போய்விட்டால் அடுத்து என்ன செய்ய வேண்டும் என்று நான் தவிக்க மாட்டேன். புத்தக வேலை காத்திருக்கிறது!''

ஆராய்ச்சி மாணவராக இருந்தபோது நாட்டிலே எமர்ஜன்ஸி தீவிரமாக இருந்த நேரம். டில்லியில் காந்தி அமைதி நிலையத்தில் அடிக்கடி படிக்கச் சென்ற அருணை அதன் செயலர் திரு ராதாகிருஷ்ணாவுக்கு மிகவும் பிடித்திருந்தது. டில்லி வந்த போதெல்லாம் அங்கே தங்கும் ஜெயப்பிரகாஷ் நாராயணனுக்கு இந்தச் சுறுசுறுப்பான அறிவாளி இளைஞனை அறிமுகம் செய்து வைத்தார். ''அப்போது முதல் நான் ஜே.பி யுடன் இணைந்துவிட்டேன்'' என்கிறார் அருண். ஜே.பி.யின் சொற்பொழிவுகளும் அறிக்கைகளும் தயாரிக்க உதவி யிருக்கிறார் இவர். இருவர் சிந்தனைகளும் சங்கமித்த நேரம். ''1972 - 74ல் ஜே. பி. வெளியிட்ட கருத்துக்களை அப்போது எத்தனை பேர் ஒப்புக்கொள்ள முடிந்தது. தேர்தல் செலவு பற்றியும் அதிகாரக் குவிப்பு பற்றியும் அன்று அவர் கூறிய எச்சரிக்கைகள் இன்று பலிப்பதைப் பார்க்கிறோம். ராஜாஜி இந்தத் தேர்தல் பற்றியும் நமது விநோதமான பிரத்யேக பாணி சோஷலிஸத்தைப் பற்றியும் கூறியவை தீர்க்க தரிசனமான வாக்கு என நான் மதிக்கிறேன்.''

ஜே. பி.யுடன் இணைந்து சுறுசுறுப்பாக இயங்கும் அறிவாளியான உழைப்பாளியைத் திரு ராம்நாத் கோயங்கா தம்மிடம் இழுத்துப் போட்டுக் கொண்டது ஓர் இயல்பான நிகழ்ச்சியாகவே நடந்தது. வரலாற்றுக் கழக ஆராய்ச்சி உபகாரச் சம்பள கெடு முடிந்த கையோடு அருண் ஷோரி இந்தியன் எக்ஸ்பிரஸில் சேர்ந்து விட்டார். நிர்வாக ஆசிரியர் என்ற பதவி ஒன்று இவருக்கு என்றே தொடங்கப்பட்டதாகத் தெரிகிறது. அருண் ஷோரியின் ஏராளமான படிப்பும் ஆராய்ச்சி முறை அணுகலும் அவரது நடைமுறை வேலைகளுக்குப் பயன்படுகின்றன. நமக்குப் பழக்கமான எந்தச் செய்தியாளரையும் போல இல்லை இவர். பரபரப்பு, படபடப்பு எதையும் காட்டிக் கொள்ளாதவர். 'விவரம், விவரம், மேலும் விவரம்' என்று குடைந்து குடைந்து தேடிக் குவிக்கிறார். ஆட்களை அனுப்பித் தேடச் சொல்லிச் சேகரிக்கிறார். சிறந்த மருத்துவ நிபுணர்கள் சிகிச்சை தொடங்குவதற்கு முன் பலவித 'டெஸ்ட்' ரிப்போர்ட்டுகளைச் சேகரித்த பிறகே அலசி ஆராய்ந்து தெளிவு பெறுவது போலத்தான் டாக்டர் அருண் ஷோரியும் தேசத்தின் ஊழல் வியாதிகளை அசைக்க முடியாத ஆதாரங்களுடன் அம்பலப்படுத்துவதும்.

அந்துலே விவகாரம் அறிவதற்கு பம்பாயில் முகாமிட்டு ஒரு பெரிய வக்கீலைப் போல நிறையத் தகவல் சேகரித்தார். எண்ணெய் பேர ஊழலை வெளியிடவும் நிறையப் பாடுபட வேண்டியிருந்தது. ''பலரும் என் வேலையை 'இன்வெஸ்டிகேடிவ் ரிப்போர்ட்டிங்' என்கிறார்கள். அப்படி ஒன்றும் நான் துப்பறிவதில்லை. வெளியே அலைவதில்லை. என்னைத் தேடி வரும் விவரங்களைப் பார்த்து அதற்கான மேல் விவரங்களைத் தேடச் சொல்கிறேன். அப்புறம் கண்டுபிடிப்பதை ஒழுங்குபடுத்தி எழுதுகிறேன்'' என்கிறார்.

தினசரி அரசியல் சமூகப் பிரச்னைகளின் குழப்பத்தில் தம்மை முற்றிலும் இழந்து விடாமல், மனித குலத்தின் நிரந்தரப் பண்புகளிலும் சிந்தனைகளிலும் பிடிப்பு வைத்திருக்கிறார். எனவேதான் பேச்சிலும் எழுத்திலும் திடீர் திடீர் என்று ஓர் உர்து கவி வாசகமோ கீதை சுலோகமோ ஷேக்ஸ்பியர் மேற்கோளோ வந்து விழுகிறது.

அடுத்த நாள் அலுவலகத்தில் சந்திக்கப் போனால் இவரது ஆபீஸ் அறை ஓர் நூலகம் போல இருக்கிறது. அதைப் பார்வையிட்டவாறே ஒரு சந்தேகத்தைக் கேட்கிறோம்: ''ஊழல்கள் பகிரங்கமானவுடன் சம்பந்தப்பட்டவர்கள் ஒரேயடியாகத் திருந்தி விடுகிறார்களா? அல்லது தண்டிக்கப்படுகிறார்களா? ஒன்றுமில்லையே?''

''இங்கும் அங்கும் ஒவ்வொன்றாக எழும் ஊழல் களைப்பு முயற்சிகள் எவ்வளவு பெரிய ஆட்சியையும் கேள்வி கேட்கலாம் என்ற தைரியத்தை மக்களுக்கு ஏற்படுத்துகின்றன. இது எதிர்காலத்தில் நாட்டு நிர்வாகத்தை ஒழுங்கு படுத்த உதவும்'' என்று பதிலளிக்கும் அருண் ஷோரி. அகமதாபாத்தில் ''எதிர்காலத்தில் நம்பிக்கைவைக்கஇடமிருக்கிறது'' என்ற தலைப்பில் ஓர் ஆராய்ச்சி உரையாற்றினார். அப்போது, தலைமை வகித்த பேராசிரியர் உமா சங்கர் ஜோஷி கூறினார்: ''அருண் ஷோரி பல காரணங்களைக் கூறினார். எதிர் காலத்தில் நம்பிக்கை வைக்க. ஒன்றை அவர் விட்டு விட்டார். நான் சொல்கிறேன். அருண் ஷோரி போன்றவர் இருக்கும்வரை எதிர்காலத்தில் நம்பிக்கை வைக்கலாம்: எனவே அவரும் ஒரு காரணம்!'' இந்தக் கூற்றை ஒரு வாழ்த்தாக ஏற்றுக் கொண்டதாக அருண் ஷோரி நம்மிடம் தெரிவிக்கிறார். நாட்டின் எத்தனையோ பத்திரிகை வாசகர்களும் இப்படியே வாழ்த்துகிறார்கள்.

பேட்டி: **தம்பி சீனிவாசன்**

படங்கள் உதவி: **ஆர். கே. சர்மா, இந்தியன் எக்ஸ்பிரஸ், புதுதில்லி**

## இது எவ்வளவோ மேல்!

சென்னை வானொலியில் காலை புது வெள்ளம் என்ற பெயரில் அலைகள் ஓய்வதில்லை ரிலீஸாகும் சமயத்தில் அந்தமான் காதலி படப் பாடலையும் நினைவெல்லாம் நித்யா ரிலீஸாகிற சமயத்தில் இளமை ஊஞ்சலாடுகிறது படப் பாடலையும் வைத்துக் கொண்டு இருந்தார்கள். இப்போது அவர்களுக்கே மனச் சாட்சி உறுத்தியதோ என்னமோ தெரியவில்லை. புதுவெள்ளம் என்ற பெயரைத் திரை கானம் என்று மாற்றி விட்டார்கள். —புலியூர் பிரபா

# வீட்டில் அனைவரின் கேசப் பராமரிப்புதானே? அதற்கு நம்பகமானது, விசேட ஃபேமிலி ஷாம்பூ பாமோலிவ்.



பாமோலிவ் ஷாம்பூ:
ரெகுலர், அல்லது
கூடுதலான
போஷாக்கிற்கு எக்.




பாமோலிவ். எல்லா வகைக் கேசத்திற்கும் ஏற்ப விசேட முறையில் தயாரிக்கப்பட்டுள்ளது. அது. வளமையான நவீன ஷாம்பூ. உங்கள் கேசத்தை நன்கு தூய்மை துலங்க வைக்கிறது. குழந்தைகளின் மென்மையான கேசத்திற்கோ மிகவும் ஏற்றது.

அது மட்டுமா? இவ்வகை ஷாம்பூக்களிலே சிக்கனமானது. பாமோலிவ் ஷாம்பூ—குடும்ப பட்ஜெட்டிற்கும் ஏற்றது.

**குடும்பத்தினர் கேசப் பராமரிப்புக்கு நேசமானது-உங்கள் பட்ஜெட்டிற்கும் ஏற்றது**

GK6E.PS.7 TM

# ஐந்து நிமிட டெஸ்ட்!



நான்கு கட்டங்களில் நான்கு படங்கள் இருக்கின்றன. ஐந்தாவதாக எது வரும் என்று அவற்றுக்கு எதிராகக் கொடுக்கப்பட்டுள்ள a, b, c; d என்ற நான்கிலிருந்து மிகப்பொருத்தமான ஒன்றைத் தேர்ந்தெடுங்கள். அனைத்துக்கும் விடையளிக்கப் பெரிய உத்யோகங்களுக்கு முயற்சி செய்வோருக்குத் தரப்படும் நேரம் ஐந்தே நிமிடம்.

1




2



3



4



5





6



7



8



# இரட்டை இலை

ஜே.எம்.சாலி



**சுப்பிரமணி—1**

முழுப் பெயர் சுப்பிரமணியம். வயது இருபத்தி நான்கு. வயதுக்குரிய இச்சைகள் இதயத்தை வருடிக் கொண்டிருக்கின்றன. காலைக் கடிக்கும் மீனைப் போல.

உள்ளுக்குள் ஓவியம் எழுதிப் பார்க்க ஆரம்பித்துப்பல மாதங்கள் ஆகின்றன. சித்ராவுக்குப் பதினெட்டு ஆகிறது. அவளே சொன்னாள். அடிக்கடி அவன் நெஞ்சில் பம்பரம் விட்டுப் பார்க்கிறாள்.

அவ்வப்போது தபால் நிலையத்தில் சந்திப்பு. சில சமயங்களில் மட்டும் நேருக்கு நேர் பேச்சு.

சுப்பிரமணி வீட்டு முகப்பில் நிற்கும் போது ஒரு முறை நிமிர்ந்து பார்த்து நாணப் புன்னகையைக் கொட்டிவிட்டு நடந்து போகிறாள். என்ன அர்த்தம்?

சித்ரா ஊருக்குப் புதியவள். ஜீப்பில் அந்த வட்டாரத்தைச் சுற்றி வரும் அரசு அதிகாரி ஒருவரின் மகள். வீட்டில் இருந்த படிப் பட்டம் பெறுவதற்கு கரஸ்பாண்டென்ஸ் கோர்ஸ் படிப்பதாக சுப்பிரமணியத்திடம் சொன்னாள்.

அதனால்தான் அஞ்சலகத்தில் சந்திப்பு. அன்றுடம் சுப்பிரமணியும் நண்பனுடன் அங்கே வந்து கொண்டிருந்தான். பாலிடெக்னிக் முடித்து டிப்ளமாவை வைத்துக் கொண்டு வேலைக்கு மனுப் போட்டுக் கொண்டிருக்கும் விநோதமான நண்பர்கள்..

இயந்திர கதியில் வந்து போய்க் கொண்டிருந்த சுப்பிரமணி நண்பர்கள், சித்ராவைப் பார்த்த பிறகுதான் உணர்ச்சிப் பிழம்புகளானார்கள்.

''யார் இந்தப் பெண்?'' என்று வாய் விட்டு சுப்பிரமணியத்திடம் கேட்டுவிட்டான் நண்பன்.

''என்ன ஆச்சு, உனக்கு? கொஞ்ச நேரத்திலேயே ஒரு மாதிரி ஆயிட்டியே!'' என்றான் சுப்பிரமணி.

''என்னன்னு சொல்லத் தெரியலே. காந்தம் கல்லைப் பிடிச்ச மாதிரி ஒரு கிறுகிறுப்பு!''

சுப்பிரமணிக்குப் புரிந்து விட்டது. இவ்வளவு அருகில், ரோஜா நிறத்தில், மின்மினி மாதிரி கண்ணை மூடி மூடித் திறக்கும் ஒரு பருவப் பெண்ணைப் பார்த்ததால் ஏற்பட்ட இன்பமான அதிர்ச்சி.

சுப்பிரமணி வெளியே காட்டிக் கொள்ள விரும்பாமல் கட்டுப்படுத்திக் கொண்டான்.

பிறகு பேசக் கூடிய சந்தர்ப்பங்கள்...

''தினம் தினம் போஸ்ட் ஆபீசுக்கு வர்நீங்களே....'' என்றாள்.

''ஆமா, அப்பாயிண்ட்மெண்ட் ஆர்டர் ஏதாச்சும் வருமான்னு எதிர்பார்த்து...''

''ரெண்டு பேரும் சேர்ந்தே வர்றீங்களே?''

''ரெண்டு பேருக்கும் பொதுவான இன்ட்ரஸ்ட் உள்ள விஷயம்!''

''உங்க பேரு?''

''என் பேரு சுப்பிரமணியம். அவன் பேர் மணிவண்ணன். முழுசா அவுங்க அவுங்க பேர் வேண்டாம்னு சுப்பிரமணின்னு ஒட்டி வெச்சுக்கிட்டோம்.''

''அப்ப நான் ஒரு பேர் வச்சுக் கூப்பிட வேண்டியதுதான்!'' என்றாள் சிரித்தபடி.

''அது என்னங்க புதுப் பேர்?''

''இ. இ.... புரியலே? இரட்டை இலை!''

**சுப்பிரமணி—2**

இயற்பெயர் மணி வண்ணன். வயது சரியாக இரண்டு மாமாங்கம். படிப்பு சுப்பிரமணியத்துக்குச் சமம்.

'சித்திரம் பேசுதடி, சிந்தை மயங்குதடி' என்று பாடிக் கொண்டிருக்கிறான். கையில் சித்திரம் இருக்கவில்லை... சித்ராவின் குவார்டர் சைஸ் புகைப்படம்!

பெரும் பாடு பட்டு வாங்கி வந்த படம். அஞ்சலகத் தெருவில் உள்ள ஒரு போட்டோ நிலையத்தில் அதன் உரிமையாளர் பக்தவத்சலத்திடம் கெஞ்சிக் கூத்தாடி வாங்கி வந்த புகைப்படம். கஸ்டமர் அனுமதி இல்லாமல் அந்நியருக்குப் புகைப்படத்தை விற்பது தர்மம் அல்ல என்று பக்தவத்சலம் உபதேசம் செய்தபோது, வாயில் கொழுக்கட்டை அடைப்பது போல் முப்பது ரூபாயைக் கையில் மடக்கி வைத்தான். சுப்பிரமணியாகிய மணி வண்ணன்.

படத்தில் சிரித்துக் கொண்டிருக்கும் சித்ரா அவனைப் பார்த்துச் சிரித்துப் பேசியதுண்டு.

''உங்க பேரு மணிவண்ணன் இல்லே?''

''இல்லே, சுப்பிரமணி!''

''உங்க பேர்லே பாதிதான் இது...இல்லையா?''

''எங்க ரெண்டு பேர் உணர்ச்சியும் ஒரே மாதிரி. வித்தியாசமே கிடையாது!'' என்றான் இந்த சுப்பிரமணி.

''அப்ப, உங்க நண்பருக்காக நீங்க எதையும் செய்வீங்க இல்லையா?''

''சித்ரா, உங்க கேள்வியே எனக்குப் புரியலே!''

''இப்ப புரியல்லேன்னாப் பரவாயில்லே.''

---

### இன்ஷூர் செய்யப்பட்ட தேனீக்கள்!

ஆசியாவிலேயே முதன் முறையாகத் தேனீக்களுக்கு இன்ஷூரன்ஸ் செய்து கொள்ளும் வசதியை யுனைடெட் இந்தியா இன்ஷூரன்ஸ் கம்பெனி தொடங்கி வைத்திருக்கிறது. தேனீக்கள் திருட்டுப் போய் விட்டாலோ அல்லது வேறு விபத்து இவைகளுக்கு ஏற்பட்டாலோ இன்ஷூரன்ஸ் பணம் கிடைத்து விடும்.

தகவல்: சக்திவேல்

சித்ராவின் புகைப்படத்தை ரகசியமாகப் பாதுகாத்து வருகிறான். பார்த்துக்கொண்டே பாடித் தீர்க்கிறான்.

''பாட்டு தூள் பறக்குதே என்ன ஆச்சு உனக்கு?''

திடீரென்று சுப்பிரமணியின் குரல். பதற்றத்துடன் சித்ராவின் படத்தைப் பத்திரிகையில் மறைத்து விட்டு நண்பனை வரவேற்றான்.

''தபால் ஆபீஸ் பக்கம் நீ வரலியே...'' சுப்பிரமணி இழுத்தான்.

''தினம் தினம் அங்கே வந்து வந்து அலுத்துப் போச்சு...''

''எனக்கும்தான். . அதனாலேதான் இன்னிக்குச் சித்ரா வீட்டுக்குப் போய் ரொம்ப நேரம்....''

''என்ன! அங்கேயா போனே?''

''ஆமா... சித்ரா கூப்பிட்டாள்... போன இடத்திலே பெரிய வரவேற்பு... உபசரிப்பு நீயும் இல்லையேன்னு வருத்தம்....''

''என்ன பேசினீங்க?''

''ஒரு புது விஷயம், சித்ரா மனசு விட்டுச் சொன்னாள்... என் மேலே அவளுக்கு விருப்பமாம்... ஜாடை மாடையா சொல்லிக்கிட்டிருந்தவள் வெளிப்படையாகவே சொல்லி விட்டாள். இன்னிக்கு...'' என்றான் சுப்பிரமணி.

''நீ என்ன சொன்னே?''

''நான் என்ன சொல்ல முடியும்? சித்ராவைப் போல ஓர் அழகான பெண் கிடைக்கிறப்ப வேண்டாம்னு சொல்ல முடியுமா?''

இந்த சுப்பிரமணியின் கையும் மெய்யும் நடுங்கியபோது, பத்திரிகை நழுவிப் புகைப் படம் தனியே எட்டிப் பார்த்தது.

அதை எடுக்க இருவரும் குனிந்தார்கள்.

''இது சித்ரா படமா?''

''ஆமா...அவளுடையபோட்டோதான்''

''இது எப்படிக் கிடைச்சது உனக்கு?''

''ஏன், எனக்குக் கிடைக்கக் கூடாதா?''

''அதை நான் தெரிஞ்சுக்கக் கூடாதா?''

''எப்படியோ கிடைச்சது.... அன்னிலேருந்து பாதுகாத்து வச்சிருக்கேன்.''

''எனக்குக் கூடத் தெரியாமே, ரகசியமா இல்லே?''

மவுனமாக உட்கார்ந்திருந்தான் இரண்டாவது மணி.

''இந்தப் பாரு... பத்திரிகை விளம்பரம், அப்பாயிண்ட்மெண்ட் விஷயம்... நீயும் மனுப் போடணும்னுதுக்காக எழுதிட்டு வந்தேன்.



மனுப் போட்டு வை. கிடைச்சாக் கிடைக்கட்டும்....''

**சுப்பிரமணி-1**

சித்ரா இன்றைக்குக் கேட்டான்.

''நீங்க மட்டும் ஒற்றை இலையா நடமாடிக்கிட்டிருக்கீங்களே, என்ன ஆச்சு?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லே, தபால் ஆபீசுக்கு நடந்து நடந்து அவனுக்கு அலுத்துப் போச்சாம்....''

''வீட்டுக்கு ஒரு முறை அழைச்சுக்கிட்டு வர்றதுதானே!''

''அழைப்பு இல்லாம அவன் எப்படி வருவான்?''

''உங்க ரெண்டு பேருக்கும் இடையே வித்தியாசமே இல்லேன்னு சொல்லுவீங்களே.... ஒருத்தர் கிட்டே சொன்னாப் போதாதா?''

''இருந்தாலும் ஒரு முறைக்காக!''

''சீக்கிரமே அழைக்கிறேன்.''

தங்கள் நட்பில் ஒரு தேக்கம், அல்லது விரிசல் ஏற்பட்டிருக்கிறது என்பதைச் சித்ராவிடம் சொல்ல முடியுமா?

'அவனுக்கு நீயா போட்டோ கொடுத்தாய் என்று கேட்டுவிட வேண்டும்' என்ற துடிப்பு. அது நண்பனுக்குப் பாதகமாகி விடுமோ என்ற அச்சத்தில் துடிப்பை அடக்கிக்கொண்டான்.

'உன்னை அவனும் விரும்புகிறான்... தெரியுமா உனக்கு?' என்று சொல்லிவிடலாமா?

சுப்பிரமணியைச் சுமை அழுத்தியது.

**சுப்பிரமணி—1, 2**

ஊரில் இந்த சுப்பிரமணிகளைப் பற்றி எல்லோருக்கும் தெரியும். பெரியவர்கள் இவர்களுடைய ஒட்டுறவைப் பற்றி வியந்து பேசியிருக்கிறார்கள்.

''இரட்டைப்பிள்ளைமாதிரி இருக்கிறானுவ. சுப்பிரமணின்னு கூப்பிட்டா ரெண்டு பேரும் திரும்பிப் பார்க்கிறானுவ.. ஆச்சரியமா இருக்குங்க....''

ஆனால் சமீப காலமாக இருவரும் முன்போல் ஒற்றுமையாய் இல்லை என்று தெரிந்து கொண்டிருந்தார் இபுராகிம் சாகிபு. இருவரையும் தனித்தனியே அழைத்து ஒன்றாக உட்காரச் சொன்னார்.

''சுப்பிரமணி, உங்க ரெண்டு பேருக்கும் ஆபில் காபில் கதை தெரியுமா?''

''அது யாருங்க ஆபில், காபில்?''—இரண்டாவது சுப்பிரமணி கேட்டான்.

''பைபிள்லே வரும்... குரான்லே வரும்... நீங்க கேட்டதில்லையா?''

''சொல்லுங்க தாத்தா!''

''ஆண்டவன் முதல்லே படைச்ச மனிதர் ஆதம்... அவருடைய ரெண்டு பிள்ளைங்க தான் ஆபிலும் காபிலும். பாசத்தோட வளர்ந்த இந்த அண்ணன் தம்பிங்க வாலிப வயசுக்கு வந்தாங்க. ஆபிலுக்கு இக்லிமாங்கிற பெண்ணைக் கல்யாணம் செய்ய ஆதம் முடிவு செய்தார். இது காபிலுக்குப் பொறுக்கலே... அந்தப் பெண்ணைத் தானே கல்யாணம் பண்ணிக்கணும்னு அடம் பிடிச்சான்; சகோதரன் மேலே இதனாலே பொறாமை ஏற்பட்டது....''

''ஏன் நிறுத்திட்டீங்க? சொல்லுங்க தாத்தா!'' என்று சுப்பிரமணி தூண்டினான்.

''ஒரு நாள் ஆபில் படுத்துக் கொண்டிருந்தப்ப ஒரு பாறாங்கல்லை எடுத்து அவன் தலையிலே போட்டு காபில் கொன்னுட்டான். இதுதான் உலகத்திலே நடந்த முதல் கொலை, சுப்பிரமணி....''

''கொடுமையா இருக்கே தாத்தா...''

சுப்பிரமணிகள் வாயைப் பிளந்தார்கள்.

''நடந்த கொடுமைகள் திரும்பவும் நடக்கக் கூடாதுங்கிறதுக்காகத்தான் சரித்திரத்தைத் திருப்பிப் பார்க்கிறோம். நீங்க ரெண்டு பேரும் நல்லபடியா இருங்க'' என்றார் இபுராகிம் சாகிபு. தனித்தனியே வந்தவர்கள் ஒன்றாக எழுந்து சென்றனர்.

''நம்ம விஷயத்திலே அதுமாதிரி ஒரு சம்பவம் நடக்க நான் அனுமதிக்கமாட்டேன்...'' என்றான் மணி வண்ணன் சுப்பிரமணி.

''உனக்காக நான் எதையும் விட்டுக்கொடுக்கத் தயாராகி விட்டேன். சித்ரா நம்ம நட்புக்குத் தடைக் கல்லா இருக்க வேண்டாம்... அதனாலே....''

''அதனாலே... நான் முடிவோட வந்திருக்கேன், சுப்பிரமணி. உன்னை விரும்பின சித்ரா உனக்குத்தான் சொந்தமாகணும்...''

''இ....இ....ரண்டு பேரும் இங்கேயா இருக்கீங்க?''

திரும்பிப் பார்த்தார்கள். சித்ரா நெருங்கி வந்தாள்.

''எங்களைத் தேடி வந்தியா சித்ரா?''

''ஆமா...அப்பாவுக்கு டிரான்ஸ்ஃபர் வந்திருக்கு. ரெண்டு நாள்லே பாக்-அப் பண்ணியாகணும்....''

''நிஜமாகவா?'' என்றான் இரண்டாவது சுப்பிரமணி.

''அதனாலே என்ன? மறுபடியும் சந்திக்காமலா போயிடப் போறோம்? கிளம்புங்க... வீட்டுக்குப் போவோம்....'' என்றாள் சித்ரா.

**கட்சிச் சின்னங்களின் பெயர்களைத் தலைப்பாகக் கொண்டு கதைகள் எழுத யோசனை கூறித் தாமும் எழுதிப் பிறரையும் எழுதச் செய்தவர் :**

**ஜெயரதன்**






குணம் அதேதான்! ஆனால் இப்போது தோற்றம் புதிது!

# காட்பரிஸ் போர்ன்விடா இப்போது அழகிய புதிய பேக்கிலே!

உங்கள் குடும்பத்தினர் அனைவரும் விரும்பிடும் இனிய சுவை. கோகோ, மால்ட், பால், மற்றும் சர்க்கரையின் நற்பண்புகள் நிறைந்தது போர்ன்விடா— இப்போது கவர்ச்சியான புதிய பேக்கிலே, முந்துங்கள்— வாங்குங்கள் புதிய டின் அல்லது புதிய ரீஃபில் பேக் போர்ன்விடா— தயாரித்து அருந்தி மகிழ்வீர்.




OBM/7833-TAM.

காட்பரிஸ் போர்ன்விடா
உங்களோடு வளரும் நன்மை

# விஞ்ஞானப் பக்கங்கள்

"த்ரீ ஸ்டாருக்கும் ஃபைவ் ஸ்டாருக்கும் என்னடா வித்தியாசம்?" முத்து கிருஷ்ணன் மூக்கில் கேள்வி வியர்த்தது.

"வசதியும் விலையும் அதுல அதிகம். நீச்சல், காபரே, பன்னாட்டு உணவு, ரூம்ல டீவி, ஏ.ஸி., சேன்னல் மியூஸிக் எல்லாத்துக்கும் அதுல அதிக வாடகை கறப்பான். எதிர்காலத்துல ஆறு ஸ்டார் ஹோட்டல் கூட வரும்" விஷய ஞானம் கொண்ட சுந்தரராஜ் சொன்னான்.

"ஆறு ஸ்டாரா? அதுல வேற புது வசதி என்னடா இருக்கு?"

"ரூம் எடுத்தவுடனே நீ ஊட்டி, கொடைக்கானல், காஷ்மீர் இதுல எது வேணும்னு சொல்லணும். உன் ரூம்லேயே நீ ஊட்டில இருக்கிற மாதிரி, காஷ்மீரில் இருக்கிற மாதிரி சூழ்நிலையை உருவாக்கி விடுவாங்க. சீக்கிரமா வந்துரும், எல்லாம் அயான் பண்ற மேஜிக்."

"இட் ஈஸ் இன்ட்ரஸ்டிங்" காதைத் திறந்து கொண்டான் முத்து.

"காத்துல இருக்கிற ஆக்ஸிஜன் போன்ற மூலகங்களோட மாலிக்கியூல்கள் சில மின்சார மாற்றங்களால் பாஸிடிவ், நெகடிவ் அயான்களாக (Ions) மாறிக் காணப்படும். இந்த மின்சக்தி கொண்ட அயனிகளைப் பத்தி இப்ப நிறைய ஆராய்ச்சி பண்ணிக் கிட்டு வராங்க. பாதுகாக்கப்பட்ட சூழ்நிலைல ஒரு குறிப்பிட்ட அளவில் இந்த அயனிகளை அமைப்பதன் மூலம் நம்முடைய உணர்ச்சிகளையும், மனநிலையையும் மாத்தலாம்னு கண்டு பிடிச்சிருக்காங்க. இனிமே ஹோட்டல்ல ஊட்டி வேணும்னு கேட்டா அதுக்கு ஏத்த மாதிரி அயனிகளை மெஷின் அமைக்கும். உடனே ஊட்டி கிளைமேட் ரெடி."



✕ அயனைஸேடர் சிகிச்சை

"ஆச்சரியமாயிருக்கே, இந்த அயனிகள் சாதாரணக் காத்துல கிடைக்காதா?" வெங்கட்ரமணி மீசை இருக்கிறதா என்று அடிக்கடி நாக்கால் வருடிக் கொண்டு கேட்டான்.

"பாஸிடிவ்,நெகடிவ் அயனிகளைக் காத்து சம அளவில்தான் உற்பத்தி செய்கிறது. ஆனால் காத்திலே உண்டாற மின்சார சக்தி மாற்றங்களால் நெகடிவ் அயனிகள் பூமிக்குப் பக்கத்திலேயும் பாஸிடிவ் அயனிகள் சற்று உயரத்திலேயும் நிறைந்திருக்கும். மழை மேகம் கூடுவதற்கு 48 மணிநேரம் முன் ஏற்படும் காற்று மூணுல ஒரு பகுதி மக்களுக்குத் தூக்கமில்லாமை போன்ற அசௌகரியங்களைத் தரும். மழை பெஞ்ச பின்னாடி காத்துல நெகடிவ் அயனிகள் நிறையக் காணப்படும். இவை அதே மக்களுக்குப் புத்துணர்ச்சி தருகிறதாம். காத்துல நெகடிவ் அயனிகள் அதிகமிருந்தா தலைவலி, அலர்ஜி, களைப்பு இவற்றிலிருந்து நிவாரணம் கிடைச்சு நல்ல தூக்கம்

# அதிசயம் செய்யும் அயனிகள்

நளினி சாஸ்திரி

வரும்னு விஞ்ஞானிகள் ஆதாரத்தோட கண்டுபிடிச்சிருக்காங்க.

ஆனா நார்மலா காத்துல இருக்கிற அயனிகள் விகிதத்தைச் செயற்கை இழை ஆடைகளும், உலோகத் தடுப்புக்களும் பாதிக்கின்றன. பூமில தானா உற்பத்தியாற நெகடிவ் அயனிகளை கான்கிரீட் ஆஸ்பால்ட் போன்ற பூச்சுக்கள் வெளியேற விடாமல் தடுத்து விடுகின்றன. இதுகூட ஒருவித பொல்யூஷன்தான். ஆனா நீர் வீழ்ச்சி உயரத்திலேர்ந்து விழறச்சே நீர்த் திவலைகளால நிறைய நெகடிவ் அயான்கள் உண்டாகும். அதனாலதான் குற்றாலம் போன்ற ஊரில் மனசுக்கு ஒரு மாதிரி சந்தோஷமாயிருக்கும்.''

''அதான் நம்ம மாடர்ன் சாமிகள் தியானம் யோகம் கற்றுத் தரும் இல்லங்களை மலைச் சரிவுகள்ல, நீர்வீழ்ச்சி பக்கங்கள்ல கட்டியிருக்காங்களா?'' —கப்புணி.

''நான்கூட ஏதோ புக்ல படிச்ச நினைவு. ஆஸ்த்மாக்குக்கூட அயான் ட்ரீட்மெண்ட் உதவராதாமே'' —முத்து.

''மெடிகல் லைன்லதான் இந்த அயனிகள் ரொம்ப உதவறது. ரஷ்யாலே நிறைய ஆராய்ச்சி பண்ணிச் சில மருத்துவக் கருவிகளைச் செஞ்சிருக்காங்க. அவை காத்துலயும் நீரிலும் ஒரே சமயம் மின் மாற்றத்தால் நெகடிவ் அயனிகளை உருவாக்கிக்காத்தோட ஈரப் பதத்தையும் அயனிகள் எண்ணிக்கையையும் அதிகம் பண்ணும்.

ஒரு ரஷ்யப் பெண் அலர்ஜியால் மூக்கடைத்து மூச்சுத் திணறினாராம். பல நாள் மருத்துவமும் பலனில்லாமல் போச்சாம். கடைசில இந்தக் கருவியால காத்தை அயனைஸ் செய்து சுவாசித்துச் சில நாளில் குணமானதாம். நெகடிவ் அயான்கள் நோய் எதிர்ப்புச் சக்தியை அதிகம் பண்ணுமாம். அலர்ஜினால உண்டாற பின் விளைவுகளைத் தவிர்க்குமாம். பிராங்கைடிஸ் ஆஸ்த்துமாவுக்கு நம்பிக்கை தருகிறதாம். ரத்த அழுத்தத்தைக்கூடக் கட்டுப்படுத்துகிறதாம்.

ஆஸ்டிரியகோவ் என்ற ரஷ்ய விஞ்ஞானி கண்டுபிடிச்ச அயனைஸேடர் (Ionisator) என்ற அந்த சாதனம் ஆக்ஸிஜன் தண்ணீர் இதை மட்டுமல்லாமல் மற்ற மூலகங்களையும் அயனைஸ் பண்ணும் திறன் கொண்டது. ஒருவன் தாமிரச் சத்துக் குறைவினால் தொடர்ந்து நோய்வாய்ப்பட்டிருந்தானாம். டாக்டர்கள் நிறையக் காரட் சாப்பிடச் சொன்னார்களாம். அந்தப் பிரகிருதியோ தினம் ஒரு கிலோ காரட்டாகவே விழுங்கியிருக்கிறான். விளைவு அவன் நிறம் மஞ்சளாக மாறினது தான். தாமிரச் சத்துக் குறைவு சரியாகலை. உடனே அந்த நோயாளியை நம்ப அயனைஸேடர் கருவி முன்னால உட்கார வச்சி சிறிது பஞ்சைத் தாமிர அயனிகள் கொண்ட கரைசலில் தோய்த்து அதை அயனைசேடரின் நுனியில் வைத்தார்களாம். அது தாமிர அயனிகளையும் காற்றுடன் கலக்க, அவன் அதைச் சுவாசிக்கத் தாமிரம் ஒரு வழியாக உடலில் புகுந்து அவன் குணமானானாம்.

ஹைட்ரோ ஏரோ அயனோ தெரபி (Hydro aero-iono Therapy) எனப்படும் இம்முறைக்கு விரைவில் மவுஸ் ஏற்படுமாம். தீப்புண்களிலிருந்து திசுக்களை மீட்க, சிலவித அல்சர்களைச் சரிப்படுத்த, ருமாடிசம், டிசன்ட்ரி, தொத்து நோய்த் தடுப்பு என்று இதன் உபயோகத்தை விரித்துக் கொண்டே போகிறார்கள். பேக்டரிகள்ல இந்தக் கருவிகளை நிறைய அமைச்சு நெகடிவ் அயான்களை உண்டாக்கினா எல்லோரும் சந்தோஷமா நிறைய வேலை செய்கிறார்களாம்.'' சுந்தர ராஜ் மூச்சு வாங்கினான்.

''இதுவரை அயனிகளைப் பத்தியும் மருத்துவத் துறையில் அதன் சாதனைகளைப் பத்தியும் தெளிவா, விளக்கமா, சுருக்கமா, எளிமையா, பயனுள்ள வகைல எடுத்துச் சொன்னீங்க. ரொம்ப நன்றி'' என்றான் வெ. ரமணி.

''இந்தக் கிண்டல்தானே வேணாங்கிறது'' என்றான் சுந்தர்ராஜ்.

**விடைகள்:**

| | | | | |
|---|---|---|---|---|
| 1. a, | 2. c, | 3. a, | 4. d, | 5. b, |
| 6. a, | 7. c, | 8. a, | 9. b, | 10. d, |
| 11. b, | 12. d, | 13. c, | 14. b, | |
| 15. c, | 16. b, | 17. b, | 18. c, | |
| 19. b, | | | | |

**அனுபவஸ்தன்!**

தவறு செய்திருக்கும்பொழுது பணிந்து போகிறவன் புத்திமான். ஆனால் தவறு செய்யாதிருக்கும் போது பணிந்து போகிறவன் கல்யாணமானவன்.

—சக்தி கமலேஸ்வரன்

# ஏர் உழவன்

கோமதிஸ்வாமிநாதன்



செல்லமுத்து கொஞ்சம் புரண்டு படுத்தான். கண்கள் சுலபமாகத் திறக்க மறுத்தன. கழுத்தில் யாரோ கையை வைத்து அழுத்துவது போன்ற உணர்ச்சி.

அவ்வளவுதான்! அவனை அறியாமலேயே ஆவேச உணர்ச்சி பொங்கி எழுந்தது. விருட்டென்று எழுந்திருந்து மார்பில் கிடந்த துண்டைத் தலையில் முண்டாசாகச் சுற்றிக் கொண்டு ''டாய்! யாருடா அவன் சோமாறி பேமானிப் பயலே! கயிதே! கிசிப்புடுவேன் கிசி!'' என்று பலமாக வார்த்தைகளை உதிர்த்து விட்டுக் கோதாவில் குதிக்குத் தயாராகும் பாணியில் கை முஷ்டிகளை மடக்கிக் கொண்டான்.

இப்போதுதான் அவன் கண்கள் சரியாகத் திறந்தன. மசமசத்த வெளிச்சம் தாக்கியது. காலடியில் அவன் ஆசையுடன், அன்புடன் தழுவிக் கொண்டிருந்த கலப்பை கிடந்தது. சற்றுத் தள்ளி அரச மரத்தடியில் அமர்ந்திருந்த விநாயகர் அவனுடைய ஆவேசத்தைக் கண்டு சிரிப்பது போல் வீற்றிருந்தார்.

ஆட்டுப்பாக்கம் கிராமமும் அந்த அரச மரத்தடியும் அவனுக்கு அன்னியமில்லை. இரண்டு கல் தூரத்தில் உள்ள அவன் சொந்தக் கிராமத்திலிருந்து எந்த வெளியூருக்குக் கிளம்பினாலும் இந்த அரச மரத்தடியையும், அதற்குக் கூப்பிடு தூரத்திலுள்ள நாச்சியப்பன் டீக் கடையையும் தாண்டாமல் போக முடியாது.

''யாரு அங்கனே.. பிள்ளையாருக்குத் துணையாக் குந்திக்கிட்டு இருக்கிறது?.. அடேடே!... செல்லமுத்து கணக்கா இருக்குது!'' என்ற கேள்வி, இனை அறிவிப்பைத் தொடர்ந்து, ''ஆமா! செல்லமுத்துவே தான்'' என்ற வழிமொழிதல் குரலும் செல்லமுத்துவின் செவிகளைத் தாக்கியபோது அவன் நன்றாகவே கண்களை விழித்துப் பார்த்தான்.

ராக்கப்பனும் இசக்கியும் அவனை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள்.

செல்ல முத்து மானசீகமாகத் தலையில் அடித்துக் கொண்டான். இவர்கள் கண்களிலெல்லாம் படாமல் ராத்திரியே தன் ஊரில் போய் விழுந்துவிட வேண்டும் என்பதுதான் அவன் ஆசை. ஆனால் கலப்பையையும் தோளில் தூக்கிக் கொண்டு எந்த ஒரு பார வண்டியும் சாலையில் தென்படாத நிலையில் எட்டு மைல் நடந்து வந்த களைப்பு நடு ராத்திரியில் விநாயகர் காலடியில் அடைக்கலம் தேட வைத்து விட்டது.

''என்ன செல்லமுத்து! தெருக் கூத்திலே வேஷம் கட்டி ஆடறுப்போலேயா? இதுக்குத்தான் வயல் வரப்பை யெல்லாம் விட்டு விட்டுப் பட்டினத்துக்குப் போனியா? கூத்திலே வேஷம் கட்டற மத்த ஆளுகளெல்லாம் எங்கே?... குளத்தாங்கரைப் பக்கம் போயிருக்காங்களா?''

ராக்கப்பனுக்கு இப்படித் தொடர்ந்து கேள்விகள் கேட்டே பழக்கம். பதில்களைப் பற்றி அவன் கவலைப்படுவதில்லை.

செல்லமுத்துவுக்கு ஒன்றுமே புரியவில்லை. திருதிருவென்று விழித்தான். ராக்கப்பன் கொஞ்சம் பெரிய இடம். மரியாதைக்கு ஏதாவது பதில் சொல்லணும். தவித்தான்.

நல்ல வேளை இசக்கி உதவிக்கு வந்தான். ''செல்லமுத்து! அண்ணன் கேட்கிறது புரியலியா? போன வருஷம் இந்த ஆட்டுப்பாக்கத்திலே தெருக் கூத்துப் போட்டாங்க! தசாவதாரமோ என்னமோ ஆடினாங்க. அதிலே பாரீஸ் ராமரோ, யாரோ இப்படித்தான் கையிலே கலப்பையை வச்சுக்கிட்டு 'அடா புடா'ன்னு கத்தினாரு... அதைத் தான் அண்ணன் கேக்கறாரு...'' இசக்கி நிறுத்தினான்.

''பாரீஸ் ராமருமில்லே லண்டன் ராமருமில்லே பரசுராமருங்கறேன்! இந்த இசக்கி

## ஆட்டம் கண்ட கடையோ?

கடவுள் துணை, கர்த்தர் துணை என்று எழுதி, வீடு, கடைகளில் தொங்க விடுவதுதான் வழக்கம். ஆனால் மதுரையில் உள்ள பாலரெங்கபுரம் டீக்கடை ஒன்றில் ''சிலுக்கு துணை'' என்று எழுதித் தொங்கவிட்டுள்ளனர்.

—திசை முத்து

கொளறுபடி பண்ணுவான். அந்தப் பரசு ராமர்தான் மறுபடியும் வந்திட்டாரேன்னு உன்னைப் பார்த்ததும் நினைச்சேன்.''

செல்ல முத்துவுக்கு இப்போ நிலவரம் புரிந்து போயிற்று. தான் எதை எதையோ கற்பனை செய்து கொண்டு மூன்று வருஷ பட்டண வாசத்துக்கு முழுக்குப் போட்டுட்டு மறுபடியும் யாரு கிட்டேயாவது விவசாயம் செய்யலாம்னு வரும் வழியிலேயே புதுக் கலப்பையைச் செய்து வாங்கிக்கிட்டு வந்தாக்க, இவங்க தன்னைக் கூத்திலே வேஷங் கட்டறவன்னு நினைச்சுப் புராணம் பேசுகிறாங்களே என்ற வேதனையும் கோபமும் சேர்ந்து பொங்கின.

''அண்ணே! ஒரு நொடியிலே பல் விளக்கிட்டு ஓடியாறேன்! நாச்சியப்பன் கடையிலே போயி டீ அடிப்போம். என் செலவு'' என்றான் செல்ல முத்து.



"ஏய் நாச்சி! எனக்கு இன்னொரு சிங்கிள்! என்ன செல்லமுத்து! பட்டிணத்திலே எல்லோரும் காலேஜுப் பாடம் படிக்கப் போவாங்க. நீ கூத்துப் பாடம் படிக்கப் போனியா?... அடுத்த தடவை போறபோது என்னையும் கூட்டிக்கிட்டுப் போ! குறுவை சாகுபடி முடிச்சுட்டுப் போகலாம்'' ராக்கப்பனுக்கு இன்னும் கூத்து நினைவு.

''நம்ப ராக்கப்பன் அண்ணனுக்கு ராவணன்வேஷம் கட்டிக்கணும். இந்தப் பக்கம் அஞ்சு தலை, அந்தப் பக்கம் நாலு தலை, அட்டையிலே செஞ்சு கட்டிக்கிட்டு....'' என்று எசக்கி ஆரம்பித்ததும் ராக்கப்பன் சீறி எழுந்தான்.

''அட சும்மா இருடா! அந்த நாகம்மாளுக்குத் தன் மனசுலே பெரிய சீதைன்னு எண்ணம்! என்னவோ களத்து மேட்டுலே அடக்கிக்கிட ஒரு துண்டு போயிலே கேட்கப் போக, பெரிய கண்ணகி மாதிரி ஓலமிட்டா!''

நாகம்மா என்ற பெயர் செல்லமுத்துவை அப்படி அடித்துப் போட்டு உட்கார வைத்து விட்டது.

இன்னொரு நாகம்மா அவன் மாமியார். அவளுடைய ஆர்ப்பாட்டத்தைத் தாங்க முடியாமல்தான் அவன் ஊரை விட்டுப் பட்டிணத்துக்கு ஓடினான்.

''பாவி! என் பொஞ்சாதியையும் பிரிச்சு என் நிம்மதியையும் போக்கி ஊரை விட்டே ஓடச் செய்த பிசாசு! பொம்பளையா அவள்! பதினஞ்சு ஆம்பிளைக்குச் சமம்'' என்று கறுவினான் மனத்துக்குள்.

செல்லமுத்து நல்ல உழைப்பாளி. கூலிக்கு வேலை செய்கிறவன்தான் என்றாலும் சொந்தத்தில் குடிசை இருந்தது. உழவு மாடு ஒரு ஜோடி வைத்திருந்தான். அவன் உழுத நிலத்திலே பயிர் அமோகமாக விளையும் என்ற பெயரையும் பெற்றிருந்தான்.

அவன் மனைவி பொன்னி சண்டி. மாடு, ஆட்டுப் பாக்கத்துக்கு அஞ்சாவது கல்லிலே நாகம்மாவோட காரை வீடு. திரும்பிப் பார்த்தா பொன்னி பிறந்த வீடு கொண்டாடப் போய் விடுவாள்.

''என்ன மருமகப்பிள்ளை! நீங்க என் மகளுக்கு வேணுங்கிற துணி மணிகளை எடுத்துக் கொடுக்க மாட்டேங்கிறீங்களாமே! இப்படி வக்கில்லாத இடம்னு தெரிஞ்சிருந்தா...'' நீட்டினாள் நாகம்மா ஒரு நாள் திடுதிப்பென்று வந்து.

செல்லமுத்துவுக்கு அப்போ கோப வேளை! உழவுக் கூலி சரியாகவந்து சேராத நேரம். ஆத்திரம் சரியாக வந்தது.

மூலையிலே கிடந்த கலப்பையைத் தூக்கினான். ''ஏய் நாகப் பாம்பு! உன்னை அடிச்சுக் கொன்னுப்போட்டு நான் ஜெயிலுக்குப் போறேன்! நீ மனுஷ ஜென்மமா? புருஷன் பெஞ்சாதிக்கு இடையிலே புகுந்து கலகம் பண்ற மிருகம் நீ!''

நாகம்மா—வரப்பில் ஓடினாள். செல்லமுத்து துரத்தினான். யாரோ வந்து பிடித்தார்கள். செல்லமுத்து கலப்பையை வீசினான். நாகம்மா நழுவி விட்டாள். கலப்பை முறிந்தது.

''இனி உங்க முகதுறயிலேயே முழிக்க மாட்டேன்'' என்று பட்டிணத்துக்குக் கிளம்பி வந்தவன்தான். தோட்ட வேலை செய்யும் வாய்ப்புத்தான் கிடைத்தது. இரக்கப்பட்ட புண்ணியவான், தன் சைக்கிள் ரிக்‌ஷாவை அவன் வசம் விட்டு வைத்துக் கூலி வாங்கிக் கொண்டான்.

செல்லமுத்து உழைத்தான். சம்பாதித்தான். சாப்பிட்டான்.

''எல்லோரும் 'டவுண்! டவுண்' என்று நாகரிக மோகத்தில் வீழ்ந்து மெட்ராஸிலே லட்சம் லட்சமா வேலை வாய்ப்புக்கள் இருப்பதாகக் கற்பனை பண்ணிக்கிட்டுக் கிராமத்தை விட்டு வந்து ஏமாந்து போறாங்க! டவுணில் பிறந்தவர்களே கிராமத்தில் போய்ப் பணி செய்ய வேண்டிய சூழ்நிலையில் கிராமத்துக் காரங்க டவுனுக்கு வந்து அல்லல்படுவது மன்னிக்க முடியாத குற்றம்'' என்று ஒரு நாள் செல்லமுத்து தான் வாடிக்கையாக ரிக்‌ஷா ஓட்டும் ஒரு லேடி டாக்டர் யாருடனோ தன் க்ளினிக்கில் பேசிக் கொண்டிருப்பதைக் கேட்டான்.

யாரோ அவன் மண்டையில் தட்டுவது போல் இருந்தது. மறுநாள் ரிக்‌ஷாவை ஒப்படைத்து விட்டு நடந்ததை யெல்லாம் மறந்து ஊருக்குத் திரும்பினான். கையில் பணம் இருந்தது.

ஊருக்கு மீண்டும் திரும்பும்போது கையில் சொந்தக் கலப்பை இருக்க வேண்டும் என்று ஆசைப்பட்டான். அதை நிறைவேற்றிக் கொண்டான்.

**ஆண்டுக்கொரு தடவை...**

எகிப்தில் உள்ள கிஸா என்ற மாநிலத்தில் நாஸ்லத் எல்சம்மன் என்ற கிராமத்தில் ஆண்டுதோறும் மே மாதம் எட்டாம் தேதியில் மட்டும்தான் திருமணங்கள் நடைபெறுகின்றன. அன்று அக்கிராமத்தில் நடைபெற வேண்டிய எல்லாத் திருமணங்களும் நடந்து விட வேண்டும். அந்தத் தேதியை விட்டால் மறு ஆண்டு மே மாதம் எட்டாம் தேதிதான் திருமணம் நடைபெறும். இப்பழக்கம் கடந்த சுமார் 175 ஆண்டுகளாக நிலவி வருகிறது.

கே. என். செல்வரத்தினம்

''ஏனையா! மெட்ராஸுக்குப் போயிட்டியாமே! என்ன தொழில் செய்யறே? காசு மிஞ்சுதா?'' என்று நாச்சியப்பன் விசாரிக்கத் தொடங்கினான்.

''இல்லேப்பா! அது டர் டர் கிணிங் கிணிங் தொழில்!... கால் வலுவா யிருக்கு: அந்த நாகம்மா பிசாசை உங் கடை முன்னாலே நிறுத்தி வச்சு ஒரு உதை விட்டாக்க அவள் அஞ்சு கல்லு தூரம் பறந்து போயி அவ வீட்டுக் காரைச் சுவத்திலே மோதிவிழுவா! தெரிஞ்சுக்க!''

''அடேடே! உன் மாமியார்க்காரியைச் சொல்றியா? அவ விழுந்துட்டா, செல்லமுத்து.''

''அவ விழுந்துட்டாளா? யானை தள்ளினாக்கூட விழாமலிருப்பாளே அவ?''

''போன மாசம் மாடு முட்டி அவளைத் தள்ளிருச்சே! ஒரு கால், ஒரு கையிலே கட்டு. வாய்ப் பேச்சுக் குறைஞ்சு போச்சு!''

''சிங்காரம்! நாயனக்காரரைக் கூட்டிக்கிட்டுப் போய் அவ வீட்டு வாசல்லே கெட்டி மேளம் அடிக்கச் சொல்லணும். அவரு கேட்கிற பணத்தைக் கொடுத்திடலாம்.''

செல்லமுத்துவை நாச்சியப்பன் முறைத்துப் பார்த்தான்.

''ஏன்யா! நான் தெரியாமத்தான் கேட்கிறேன்! விரோதியா யிருந்தால் கூட அவள் வீழ்ந்துட்டான்னு கேட்டு சந்தோஷப்படறது மனுஷத் தன்மை இல்லே ஐயா! பட்டினத்துக்குப் போயி உனக்கு மனிதாபிமானம் மரத்துப் போச்சா?...''

செல்லமுத்து திகைத்துப் போனான்.

''நாச்சி!... நான் நினைச்சதோ, சொன்னதோ தப்புத்தானப்பா! எனக்காக ஒரு சிறு உதவி பண்ணுவியா?....'' செல்லமுத்து வளைஞ்சு நாச்சியப்பனைப் பார்த்தான்.

நாச்சியப்பன் அனுமதி கொடுப்பது போல் தலையை ஆட்டினான்.

''இந்தா நூறு ரூபாய். இதிலே பாதி என் பெண்சாதிக்குத் துணி வாங்கிக்க. இன்னொரு பாதி என் மாமியாரோட வைத்தியச் செலவுக்கு நான் கொடுத்து அனுப்பிச்சதாகச் சொல்லு. நான் ஊரிலேயே போய் விவசாயத்தைத் துவக்கப் புதுக் கலப்பை வாங்கிட்டேன்னும் சொல்லு! என் குடிசைக் கதவு அவங்களுக்கு எப்பவும் திறந்தே இருக்கும்னு சொல்லு.''

செல்லமுத்து நூறு ரூபாய் நோட்டை எடுத்து நாச்சியப்பன் கையிலே வைத்தான். இப்போது நாச்சியப்பனுக்குத் திகைப்படைய ஒரு சான்ஸ்.

''நானே போவேன் நாச்சி! ஆனுக்க அவுங்க என்னைப் புரிஞ்சுக்காமப் பேச ஆரம்பிச்சுடுவாங்களோன்னு பயப்படறேன்! அதுக்குத்தான் நீ தூது போறே! எனக்காக நீ இதைச் செய். நீ என்னை மனுஷனா மாத்திட்டே யில்லே! அதுக்கு இந்தத் தண்டனை! நான் வரேன்....''

அடுத்த சில நிமிஷங்களில் செல்லமுத்து தோளில் சாத்திய கலப்பையுடன் வரப்பில் நடந்து கொண்டிருந்தான். அவன் மனம் நிறைந்திருந்தது.



ஒவ்வொரு நாளையும்

# டான்டெக்ஸ்®

அணிந்து துவக்குங்கள்

காலை முதல் இரவு வரை டான்டெக்ஸ் அணிந்து மகிழுங்கள். அதன் கச்சிதமான உடம்போடு ஒட்டும் அமைப்பும், சிறப்பும் உங்களுக்கு நாள் முழுவதும் இதமான சுகத்தை அளிக்கிறது.

IS : 4964



ஒட்டி உறவாட
**டான்டெக்ஸ்**

ப்ரீஃப்ஸ் • வெஸ்ட்ஸ் • காஷ்வெல்ஸ்
ஸ்போர்ட்ஸ் பனியன்கள் • சிறுவர்களுக்கான ரகங்கள்




ttk தயாரிப்பு

Imageads-M- TT. 1568Tam

# சரணம் கணேசா! 6



பூஜையின் முடிவில் நிவேதனமாகக் கொழுக் கட்டைகளைக் கொண்டு வந்து வைத்தாள் அருந்ததி. விநாயகர் அக்கல்லினின்று தோன்றி மோதகங் களை எடுத்துக்கொண்டார்.




இதோ இந்த மாவுக்குள் இனிய பூரணம் இருப்பதுபோல, இவ்வுலகம் முழுதினுள் ளும் பூரணப்பொருளான விநாயகரே அன்பு வடிவாக இருக்கிறார் தெரிந்ததா?




அன்றிலிருந்து மோதகமே (கொழுக்கட்டை) விநாயகரின் நிவேதன மாயிற்று.
சிவபிரான் பாணலிங்கத்திலும் மகாவிஷ்ணு சாலக்கிராமத்திலும் பூஜிக்கப் படுவதுபோல, இனி என்னைப் பக்தர்கள் சோணபத்ரக் கல்லில் வழிபடுவார்களாக.






வசிஷ்டரின் பேரன் பராசரன்...
இதோ பார்த்தீர்களா, உங்களைப் போலவே களிமண்ணால் ஓர் உருவம் செய்திருக்கிறேன்.
ரொம்ப நன்றாக இருக்கிறதே!

கதை: ரா. கணபதி

படக்கதை அமைப்பு: வாண்டுமாமா

சித்திரம்: விஜு
















# உகந்த வண்ணத் திட்டத்திற்கு உரிய சாயல்கள் பற்றிய முழு விவரங்களை அறிந்து கொள்ள வாரீர்.

எந்தச் சாயலையும் தேர்ந்தெடுப்பதற்கு முன்பாக வண்ணங்களின் சக்தி பற்றி தெரிந்து கொள்ள வேண்டும். வண்ணங்கள் தனக்குள்ளும் நம்மீதும் செலுத்தும் ஆதிக்க ஆற்றலை அறிந்து கொள்ளவும். இதன் மூலம் உங்கள் இல்லத்திற்கு ஒரு மேம்பட்ட வண்ணத் திட்டத்தை மேற்கொள்ள முடியும். "All you wanted to know about painting" என்ற நெரோலாக் பெயிண்ட்ஸ் விளக்கப் புத்தகம் இந்த வகையில் உங்களுக்குப் பெரிதும் உதவியாக இருக்கும். இலவசப் பிரதிக்கு இன்றே எழுதவும்.

கீழே தரப்பட்டுள்ள கூப்பனை நிரப்பி உடனே தபாலில் அனுப்பி வைக்கவும்.

தயவு செய்து நெரோலாக் பெயிண்ட்ஸ் விளக்கப் புத்தகம் ஆங்கிலப் பிரதி ஒன்று அனுப்பவும்.

பெயர் ____________________

முகவரி ____________________

____________________ பின்கோட் __________

குட்லாஸ் நெரோலாக் பெயிண்ட்ஸ் லிமிடெட்
தகவல் டெஸ்க்,
த.பெ. எண் 16322 பம்பாய் 400013
168 R-V

தயவு செய்து 50 காசு தபால் முத்திரையும் வைத்து அனுப்பவும்.

## நெரோலாக் பெயிண்ட்ஸ்

இல்லங்களுக்கு எழிலூட்டும் வண்ணங்கள்!




ULKA-GNP-168 R TAM

# இரத்தத்தின் நிறம் சிவப்பு

※ மேல்மருவத்தூர் கோயில், ஆதிபராசக்தி.



பங்காரு அடிகளார்.

சென்னையிலிருந்து சுமார் 90 கிலோ மீட்டர் தொலைவில் மதுராந்தகத்துக்கும் அச்சிறுபாக்கத்துக்கும் இடையேயுள்ள மேல் மருவத்தூரில் அருள்பாலித்து வீற்றிருக்கிறுள் ஆதிபராசக்தி. நாடிவரும் பக்தர்களுக்கு திருபங்காரு அடிகளார் கூறும் 'அருள்வாக்கு' இவ்வாலயத்தின் பிரசித்தியைத் துரிதமாகக் கூட்டியது.

சில தினங்களுக்கு முன்னுல் கேள்விப்பட்ட ஒரு செய்தி அதிர்ச்சியைத் தந்தது.

பங்காரு அடிகளார் கைது செய்யப்பட்டு ஜாமீனில் விடுவிக்கப்பட்டுள்ளார்...கோயி லில் கள்ள ரூபாய் நோட்டு அச்சடிக்கப் படுகிறதாம்... கோயிலைப் பூட்டி சீல் வைத் துள்ளனராம்...டெல்லியிலிருந்துவந்த புலன் விசாரணை அதிகாரிகள் பங்காரு அடிக ளாருடன் மப்டியில் தங்கி மேற்படி நட வடிக்கை எடுத்துள்ளனராம் – இப்படிப் பட்ட வதந்திகள்.

உண்மை நிலையை நேரில் கண்டறிய மேல் மருவத்தூருக்குப் போனேம்.

வழக்கம்போல் கோயில் வாசலில்கார்கள். சிவப்பு ஆடையில் பக்தர்கள், பக்தைகள்.. ஆதி பராசக்தி அருள் தரிசனம் தந்து கொண்டிருந்தாள். பங்காரு அடிகளார் அருள்வாக்குச் சொல்லிக் கொண்டிருப்பதை நிர்வாகிகள் தெரிவித்தனர்.

1966ல் சுயம்புவாகத் தோன்றியதாகக் கூறப்படும் அன்னை பராசக்தியின் சன்னி தானத்தில் 1972, டிசம்பரில் முதன் முதல் பங்காரு அடிகளார் அருள்வாக்குக் கூறி ஞராம். முதலில் இலவசமாகத்தான் அருள்வாக்குக் கூறப்பட்டது. சென்ற நான்கு ஆண்டுகளாகத்தான் கட்டணம் வசூலித்து அருள்வாக்கு.... அருள்வாக்குக் கேட்க ஏரா ளக் கூட்டம்.

சில சந்தேகங்களுக்கு விளக்கம் கேட்ட போது திரு பங்காரு அடிகளார் அளித்த பதில்கள்:

''அருள்வாக்கு கூறுவதற்கென்று ரூ. 25, 51, 101 என்று வாங்குவதாகக் கூறப்படு கிறதே. இதனுல் ஏழை எளியவர்களுக்கு இவ்வாய்ப்புக் கிடைக்காதே.''

''அருள்வாக்கு கூறும் நாட்களில் மொத் தம் 60 பேருக்கு அருள்வாக்கு அம்மன் கூறுகிறுர். இதில் பத்துப் பேருக்கு இலவச மாகக் கூறப்படுகிறது. ரூ. 2 மட்டும் வசூ

வித்து மேலும் பத்துப் பேருக்குக் கூறப்படுகிறது. பாக்கி உள்ளவர்களிடமிருந்து தான் நீங்கள் சொன்னவாறு பணம் வசூலிக்கப்படுகிறது..

''பணத்தை நாங்கள் சொந்தத்திற்கா எடுத்துக் கொள்கிறோம்?... நான்கு ஆண்டுகளில் கோயில் துரிதமாக வளர்ச்சி பெற்றிருக்கிறது. அருள்வாக்குக் கேட்க வருபவர்களுக்கு இலவச உணவிடுகிறோம். ஏழை மக்களுக்கு அன்னதானம், வஸ்திர தானம் செய்கிறோம். கல்விக் கூடங்கள் கட்டவும் முடிவு செய்துள்ளோம். ஸ்பெஷலிஸ்ட் மருத்துவர்களை வரவழைத்துப் பக்கத்தில் உள்ள கிராமங்களில் ஏழை மக்களுக்கு மருத்துவப் பரிசோதனை செய்ய இருக்கிறோம்....''

''இக்கோயில் ஹிந்து மத கலாச்சார அறநிலைக்கு (H.R.&C.E.) உட்பட்டதா?''

''இல்லை... இது ஹிந்துக்களுக்கு மட்டுமான கோயில் இல்லை. இங்கு எல்லா மதத்தினரும் வருகின்றனர். எல்லோரும் சமமாக நடத்தப்படுகின்றனர். ஜாதி, மத, ஆண், பெண் வித்தியாசமின்றி எவரும் மூல விக்கிரகத்துக்கு இங்கு அர்ச்சனை செய்யலாம்.''

''நீங்கள் ஹிந்துவா?''

''ஆமாம்.''

''இங்கு ஆவாஹனமாகியுள்ள ஆதி பராசக்தி ஹிந்து தெய்வம்தானே?''

''இறை தத்துவம் எல்லா மதத்தினருக்கும் பொதுவானது.''

''விபூதியும் குங்குமமும் ஹிந்துக்களுக்கு உரித்தான குறியீட்டுப் பிரசாதங்கள் ஆயிற்றே... அவைதானே கோயிலில் அளிக்கப்படுகின்றன.''

''கோயிலில் விபூதி குங்குமம் மட்டுமின்றி சந்தனம், கற்கண்டு ஆகியவையும் அளிக்கப்படுகின்றன.''

---

## சிந்தனைக்குச் சில...

நீண்ட நேரம் கண் விழிக்கத் தயாராக இருப்பவனே தனது கனவை நனவாக்கிக்கொள்ளும் தகுதியைப் பெறுவான். —ரோகர் பேகன்

தான் கற்றுத் தேர்ச்சி பெறாத எந்தத் துறையிலும் ஈடுபட எவரும் முன்வருவதில்லை. ஆனால் மிகவும் கடினமான ஒரு துறைக்கு மட்டும் மிக வேகமாக எல்லோருமே முந்துகிறார்கள்— அந்தத் துறை அரசியல். —சாக்ரடீஸ்

வேகத்துடன் ஏறிச் செல்வது பெரிதன்று; எப்போதுமே (நிதானமாக) ஏறிச் சென்று கொண்டே இருக்கவேண்டும். அதுவே பெரிது—பெருமை அளிப்பது. —ப்ளுதார்க்

தொகுப்பு டி.எஸ். சீதாராமன்

---

''மேல்மருவத்தூர் சுயம்பு ஆதி பராசக்தி வழிபாட்டு மன்றங்கள் 188 இடங்களில் இருப்பதாகவும், அம்மன் வழிபாட்டுக்குப் பிரசாரங்கள் நடப்பதாகவும் அறிகிறோமே இவை அவசியமா?''

''கட்டுக்கோப்பான முறையில் பிரசாரங்கள் மூலம் இறை வழிபாட்டை மக்கள் மனத்தில் ஊட்டுவதிலென்ன தவறு? இங்கு திரளாக மக்கள் வருவதையும், நான்கு ஆண்டுகளில் இக்கோயில் அடைந்துள்ள வளர்ச்சியையும் கண்டு பொறுக்காத ஒரு சிலர் ஏராளமான புரளிகளைக் கிளப்பி உள்ளனர்...''

''அதுமாதிரி நாங்களும் கேள்விப்பட்டுத் தான் உண்மை நிலை அறிய வந்தோம்.''

''இம்மாதிரி துஷ்பிரசாரம் செய்யும் கும்பலைச் சார்ந்த ஒருவனைக் கண்டுபிடித்து விசாரித்தபோதுதான் இப்பிரசாரத்துக்கான அடிப்படை கோயிலின் வளர்ச்சி மீதான பொறாமை என்று அறிந்தோம்.... என்னைப் பற்றிய தவறான வதந்திகளைக் கேள்விப்பட்டுப்பெரிய அரசியல்வாதிகள், நீதிபதிகள், மருத்துவர் உட்பட பலரும் நேரில் வந்து உண்மை அறிந்து திருப்தியுடன் சென்றனர்.''

''மேல் மருவத்தூர் அன்னை பராசக்தியை வழிபட வரும் பலரும் சமீப காலமாகச் சிவப்பு ஆடை உடுத்துகிறார்களே...''

''இங்கு வருபவர் அனைவரும் ஒரே குலம், ஒரே இனம் என்ற அடிப்படையில்.. ரத்தத்தின் நிறம் எல்லோருக்கும் சிவப்புத்தான் என்ற தத்துவத்தில் செவ்வாடை அணியச் சொல்கிறோம்...''

''சிவப்பு ஆடை எல்லாப் பக்தர்களும் அணிய வேண்டுமா?''

''தொண்டர்களும் அம்மன் அருகில் சென்று வணங்கி அபிஷேகம் செய்கிறவர்களும் அணிய வேண்டும் என்பது எங்கள் முடிவு...''

''எதிர் காலத்தில் என்னென்ன நற்பணிகள் செய்ய உத்தேசித்துள்ளீர்கள்?''

''ஜாதி மத பாகுபாடு இன்றி அனைவரும் சமம்என்ற கொள்கை மனத்தில் படிய இங்கு வழி வகுக்கப்படுகிறது. சமீபத்தில் மகளிர் ஆன்மீக மாநாடு நடத்தினோம். நல்லொழுக்கம் மக்கள் மனத்தில் பரவ எங்களால் ஆனதைச் செய்வோம்.''

சில ஏழைகளுக்கு எங்கள் எதிரிலேயே வஸ்திரங்களை திரு பங்காரு அடிகள் வழங்குகிறார். ஒரு பள்ளியில் ஆசிரியராக இருக்கும் இவர் லீவில் தற்போது இருக்கிறார்.

ஆதி பராசக்தியின் மூலஸ்தானத்தை அடைகிறோம். மூலஸ்தான வாயிலின் மேல் லக்ஷ்மி, சரஸ்வதி விக்கிரஹங்களும், விநாயகர், முருகர் விக்கிரகங்களும் இருக்க மூலஸ்தானத்தில் அன்னை ஆதி பராசக்தி அருளொளி பரப்பியபடி தரிசனம் அளிக்கிறார். அம்மனை மனதார வணங்கி விபூதியும் குங்குமமும் பிரசாதம் பெற்றுத் திரும்புகிறோம்.

பேட்டி : நாயகன் — ப்ரியன்

படங்கள்: ஜெய்மோகன்



# ஸ்பரிசம்

காய்ந்துபோன சுரைக் காய் புரடை கலகலக்கிற மாதிரி கலகலப்பான காதல். (இன்ஸ்பிரேஷன் அ. ஒவ்வ தில்லை)

கல்லூரி மாணவர் அணி ஒரு பக்கம். மாணவியர் அணி மற்றொரு பக்கம். மோதோ மோதோ... மோதோ... என்று மோதிக் கொள்ளுகிறார்கள்.

ராக்கிங், ஏரோ விடுதல், இண்டல், லவ் லெட்டர், போட்டி எல்லாம் படத்தை இடைவேளை வரை கண்ணை இமைக்க விடாமல் நகரச் செய்து விடுகிறது.

மாணவர்களுக்கெல்லாம் குரு ராஜப்பா. (எஸ். வி. சேகர்) மாணவிகளுக்கு சித்ரா. (ஸ்ரீலட்சுமி)

ஒடிந்துபோன நாற்காலி மீது ராஜப்பாவை ஏறச் செய்து கீழே விழவைக்கிறாள் சித்ரா.

'குரு' பழிக்குப் பழி வாங்க டெலிபோனில் சித்ராவின் அப்பா இறந்துபோனதாகத் தகவல் கொடுத்து அவளை அழவைக்கிறான்.

இந்த நிகழ்ச்சியே அவர்களது உள்ளத்தில் காதல் நெகிழ்ச்சிக்கு வித்தாகிறது. காதல் மலர்ந்தபோது வழக்கம்போல 'அப்பா' வில்லனாக மாற காதலர்கள் சந்திக்க முடியாமல் போகிறது. மாணவர்களெல்லாம் ஒன்று கூடிச் சந்திப்புக்கு ஏற்பாடு செய்கிறார்கள். அப்புறம் 'ஓடிப்போகவும்' திட்டம் வகுத்துத் தருகிறார்கள்.

அதற்குள் அப்பா மனம் திருந்தி ஓடிப் போனவர்களைத் துரத்திக் கொண்டு ஓட, அவர்கள் ஓட, ரயில் தண்டவாளத்தில் சித்ராவின் கால் சிக்கிக் கொள்கிறது. ராஜப்பா அவள் காலைத் தண்டவாளத்திலிருந்து விடுவிக்க முயற்சி செய்யும்போது...

சே! மாணவர்கள் இத்தனை பாடுபட்டுச் சேர்த்து வைத்த காதலர்களைக் கொன்று விட்டார்களே என ஆத்திரம் ஆத்திரமாக வருகிறது. எடுக்கத் தெரிந்தால் போதுமா? முடிக்கத் தெரிய வேண்டாமா?

காத்தவராயன், சுப்புணி இருவரும் தனி டிரேக்கில் போகிறார்கள். லவ் ட்ரேக்.

நம்ப முடியாத செய்தி: டி. வி. சோபனாவின் கணவர் ரவிதான் இப்படத்திற்கு இசை அமைத்திருக்கிறாராம். முதல் படத்திலேயே சிறந்த இசை அமைப்பாளர் வரிசையில் இடம் பெற்று விட்டார். பாடப் பல புதியவர்களுக்கு வாய்ப்பு

கதை வசனம் எழுதி, விறுவிறுப்போடு டைரக்ட் செய்திருக்கும் ஆர். சி. சக்திக்கு தமிழில் நல்ல தலைப்பா கிடைக்கவில்லை?



# எங்கேயோ கேட்ட குரல்!

முதல் மனைவி (அம்பிகா) மாற்றானுடன் ஓடிப்போவதுதான் கதையின் முதுகெலும்பு. ஏன் ஓடிப்போகிறாள் என்பதற்குக் கதையில் வலுவான காரணங்கள் இல்லை.

சரி! ஓடிப்போனவள் சென்னைக்குப் போனதும் மனம் திருந்தியதற்காவது அழுத்தமான சம்பவங்கள் உண்டா? அதுவும் இல்லை.

துறவி வாழ்க்கை நடத்த அவள் கிராமத்துக்கே திரும்புகிறாள். ஒதுக்குப்புறமாக அவள் தனித்து வாழ்வது குமரனுக்குத் தெரியாமலா போகும்?

நடுவில் அம்பிகாவின் குழந்தை பாசம் தலைவிடுகிறது. கதை வளர்கிறது அத்தனை பேருடைய தலை நரைக்கும்வரை!

சுலபத்தில் ஏற்க முடியாத கதையின் முடிவோ நமது தலையையும் நரைக்க வைத்து விடும்போல் பிரச்னைக்குரிய பல கேள்விகளை எழுப்புகிறது.

கணவன் முன்பு மண்டியிட்டு அம்பிகா நிலத்தில் முட்டிக் கொண்டு கதறி அழும் கட்டத்தில் உயர்ந்துவிடுகிறார் — நடிப்பில்!

குருவித் தலையில் 'பனங்காயை வைத்த மாதிரி ரோல் ராதாவுக்கு.

இரண்டு 'ஷ்' நட்சத்திரங்களும் டெல்லி கணேஷ், கமலா காமேஷ் நடிப்பில் பேஷ்!

பஞ்சு அருணாசலம் உரையாடல்களை உரைத்துப் பார்த்திருக்கிறார். பாபுவின் காமிரா அமைதி காக்கிறது.

அந்தப் படத்தில்—
கமல் 'சகல கலா வல்லவன்!'—
இந்தப் படத்தில்—
ரஜினி சகல கலா நல்லவன்!

— திரைஞானி

உ

காலமெல்லாம் களிப்புடன் வாழ
கற்றிடுவீர் இக்கலையை.,

# ஆழ்நிலை தியானம்

(தபால் வழி போதனா முறைப் பயிற்சி)

காலையோ மாலையோ கால் மணி நேரம் செலவிட்டால் போதும் — காலமெல்லாம் களி கொள்ள வாழலாம் என்ற இனிய நிலை தருகின்ற கலை. கண்ணீர் துளிர்கின்ற கவலைகள் ஓயும், — காசில்லை என்ற பேச்செல்லாம் சாயும் — கதறிட வைக்கும் வியாதிகள் விலகும். **90 நாள்** பயிற்சியிலேயே துன்பம் அகலுகின்ற அனுபவங்கள். தீரா வியாதி தீர மாறா துன்பம் மாற, செல்வ சுபிட்சங்கள் சிறக்கின்ற நிலை காண — இக்கலை பயிலுங்கள் இன்ப நிலை அடையுங்கள். எளிதில் கற்றிட ஏற்ற நல்ல துணைப்பாடங்கள் — எல்லாத் துன்பமும் இல்லா நிலை பெற இறைவன் பூஜை பிரசாதங்கள் தரப் படுகின்றன. சேரும் முறை, செலுத்தும் கட்டணம் அறிய 90 ந.பை. தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட கவரிணைத்து 10-10-1982 தேதிக்குள் மனுச் செய்து கொள்ளுங்கள்.

பிரபல ஜோதிடர், ஜோதிட ஆசிரியர்

## ஸ்ரீமத் ஜெயவீரதேவா

யோகி, ராஜயோகப் பயிற்சியாளர்

பிளாட் நெ. 204, கதவு எண். 5, அண்ணா நகர், மதுரை-625 020

---

சஞ்சலம் தீர்க்கின்ற

# சனிப் பெயர்ச்சி

ஸ்ரீ துந்துபி ஆண்டு ஐப்பசி மாதம் 11ம் தேதி **28-10-82** வியாழக் கிழமை இரவு சுமார் 3 மணியளவில் — சஞ்சலம் தீர்க்கும் **சனி பகவான்** கன்னி ராசி விட்டு துலா ராசி பெயர்கின்றார். இத்தருணம் இதமான பூஜையிட்டு ஏற்ற நல்ல நியதி நிஷ்டை நெறி முறைகளுடன், வேத வழி தழுவி நின்றால் — இட்ட பல நலன்களை இனிமையுறத் தந்திடுவார் **சனி பகவான்** என்று சாத்திரங்கள் ஓதுகின்றன. அதன்படி 27 நாட்கள் சர்வ நட்சத்திர பூஜை **28-10-1982** தேதி முதலாக ஏற்கப்பட இருக்கின்றது.

இது பூஜையில் கலந்து கொள்வது எங்ஙனம் — கலந்து கொள்வதால் ஏற்படும் நலன்கள் என்ன என்ன என்று அறிய **50 ந.பை.** தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட கவரிணைத்து **30-9-1982** தேதிக்குள் மனுச் செய்து கொள்க.

பிரபல ஜோதிடர், ஜோதிட ஆசிரியர்

## ஸ்ரீமத் ஜெயவீரதேவா

யோகி, ராஜயோகப் பயிற்சியாளர்

பிளாட் நெ. 204, கதவு எண் 5, அண்ணா நகர், மதுரை – 625 020



# கண்ணே ராதா

**ராதா**

பஸ் ஸ்டாப்பில் தோழிகளோடு நின்று நிறை கர்ப்பிணி மாதிரி நடித்து, காரில் வருவோரைக் கையை அசைத்து நிறுத்தி ஏறிக்கொண்டு 'நூன் ஷோ' பார்க்கப் போகும் உங்களுடைய குறும்புத்தனத்துக்கு ஒரு 'ஜே!'

'மழை வருமா?' என ஜாடையாகக் கேட்டு போன் செய்து பேசும் கார்த்திக்கிடம் பெற்றோர்கள் முன்னிலையிலேயே 'வரும்' என ஜாடையாகப் பதில் சொல்லி சல்லாபத்திற்கு அழைக்கும் சாமர்த்தியத்திற்கு ஒரு ஜே!

அழகுக்கு ஒரு ஜே, இளமைக்கு ஒரு ஜே! அப்புறம் 'சே! சே!' என்று முகம் சுளிக்க விடாமல் நடிக்கும் நடிப்புக்கும் ஒரு 'ஜே'.

**கார்த்திக்**

உற்சாகமாக நடித்திருக்கிறீர்கள். காரில் ஏமாற்றிய பெண்ணைக் கடத்திக் கொண்டு போய் ஊருக்கு வெளியே விட்டுவிட்டுப் பழி வாங்கும் குறும்பில் ஆரம்பித்து...

மனைவிக்கு இரண்டாம் கல்யாணம் செய்து வைக்க முயலும் மாமனாரை மேளக்காரனாக வந்து நையாண்டி செய்கிறவரை அமர்க்களம்! பிளஸ் 1ல் இருந்து பிளஸ் 2க்குப் போயிருக்கிற மாதிரி ஒரு உணர்வை உண்டாக்கியிருக்கிறீர்கள்.

**தேங்காய் சீனிவாசன்**

ஆடாமல் அசையாமல் உட்கார்ந்த இடத்தில் இருந்தவாறே சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் உங்களுடைய நகைச் சுவை உரையாடல்தான் படத்திற்கு உயிர்நாடி. உங்களுடைய பாணியிலேயே உங்களைப் பாராட்டுவதானால்... சிரிக்க வைக்கும் 'ஜில்மிஷம்' பேஷ்!

**வனிதா**

வழக்கமாக எல்லாப் படங்களிலும் 'போகக்' என்று வந்து போகும் நீங்கள் இந்தப் படத்தில் ராதாவுடன் ஒட்டிக்கொண்டதாலோ என்னவோ முக்கால் கிணறு தாண்டியிருக்கிறீர்கள். அந்த முக்கால் படத்திலும் கணவன் 'பல்லி விரதம்' இருந்து உங்களது வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டிருக்கிறார். படம் முடியும்போது உங்களையும் காணோம் உங்கள் கணவராக நடித்தவரையும் காணோம். (ஆமாம், யார் அது?) எங்கே போனீர்கள்?

**வசந்தா**

மகளுக்குக் கல்யாணமாகி ஒரு வாரம் ஆகியும் 'இன்னமும் இது நடக்கவில்லையே' என ஏங்கும் ஏக்கத்திலாவது கொஞ்சம் இளைக்கக் கூடாதா?

**வடிவுக்கரசி**

குருடியாக வந்து கதையில் ஓரம் கட்டியிருக்கிறீர்கள். நடிப்பு கச்சிதம்.

**இராம நாராயணன்**

'இளமை இனிமை' என்பதைப் புரிந்து வைத்திருக்கிறீர்கள். சிரிக்க வைக்கவும் தெரிந்திருக்கிறது. (உரையாடல்கள் கை கொடுக்கின்றன.) ஜாக்பாட் சீனிவாசனுக்கு உங்களுடைய ஒத்துழைப்பும் ஜாக்பாட்தான்.

- திரைஞானி

ஒருவர்: டாக்டர், என் முடி உதிருகிறது. என்ன செய்வது?
டாக்டர்: வெளியே போட்டு விடுங்கள்.
—ப்ரியா பாலு



ஒரு நீண்ட விநாடிக்கு நான் நிசப்த மானேன். கண்கள் இம்மி விலகவில்லை. மனத்தில் ஆனந்தம் பொங்க 'சுவர்க்கா' என்று கூவி இருப்பேன்.

நல்ல வேளை! என் பகுத்தறிவு என்னைக் காப்பாற்றியது. சுவர்க்காவைப் பார்த்துப் பத்து வருடங்கள் ஆகிவிட்டன. இப்போதும் அவள் எப்படி பழைய தோற்றத்தில் இருக்க முடியும்?

இரட்டைப் பின்னல் பெண் என்னை ஒரு பார்வை பார்த்தாள். பிறகு குடத்தை எடுத்தவள் ஒக்கலில் வைத்தாள். சிலுங் சிலுங் என்று ஒரு மானசிகக்கச்சைக்கு ஏற்பநடந்துபோனாள்.

என் கனமான கிட் பையைக் கைமாற்றினேன். உஷ்ணமான பெரு மூச்சு விட்டேன். கிராமத் தெருவை நோக்கி நடந்தேன்.

தெருவை அணுக அணுக மனம் உணர்வு மயமாக மாறியது.

ஈரம் விழுந்த கண்களுடன் அதன்இரு மருங்கும் பார்த்தேன். பத்து வருடங்கள் அழிந்து ஒரு பழைமைக்குள் வந்தது போல் தோன்றியது. ஒரு கச்சா பி. ஈ. பட்டதாரியாக அந்த ஊருக்கு வந்தது நினைவுக்கு வந்தது.

இதே போல் காலையில்தான் வந்தேன். இதே நடுத்தெருவில் அப்போது வெறும் போடு நடந்தேன். வேலி வீடுதான் எனக்குக் கம்பீரமாகத் தென்பட்டது. கதவைத் தட்டினேன்.

கதவு மெள்ளத் திறக்க, இரு ஊடுருவும் கண்கள் என்னைப் பார்க்க, அந்தக் கணமே நான் மூச்சு நின்று இறந்திருக்க முடியும். அவ்வளவு அழகாக இருந்தாள் அவள்.

பேச்சு வரவில்லை. யத்தனம் செய்து அவளைக் கேட்டேன். ''இங்கே இடம் கிடைக்குமா?'' என்று.

ஒரே ஒரு சைகை செய்தாள். உள்ளே அழைத்துப் போனாள். மாமா 'சந்திரநாத் பட்'டிடம் என்னை விடுத்தாள்.

உடைந்த ஆங்கிலத்தில் அவர் பேசினார். அவருக்குத் தெரியும் அந்த மேற்குக் கடற்கரைக்கான ரயில் பாதை அந்தப் பிராந்தியத்தின் வழியாகச் செல்ல இருப்பது. இதனால் அந்த அத்துவானக் கிராமங்களில் கூட இட வசதி கிராக்கியாக இருந்தது. கூசாமல் அறுபது ரூபாய் அவர் கேட்டதை என்னால் மறக்க முடியாது.

மாடியில் சந்திரநாத் கொண்டு விட்டார். சின்ன அறை. சின்னக் கட்டில். மண் கூஜா. நிர்வாண பல்ப். சுவரில் பழங்குடிகள் எழுதிய சிலா விகிதங்கள்.

அறையின் ஒரு சன்னலைத் திறந்தேன். மற்றொரு சுவாச அடைப்பு எனக்குக் காத்திருந்தது!

பிரம்மாண்டமான உயரத்துடன் மேற்குத் தொடர்ச்சி மலைகள்! என் கை எட்டத்தில் இருப்பது போல் அவ்வளவு நெருக்கம்! அதன் செழிப்பான காடுகளும், தழைகளும் சின்னச் சின்ன ஓடைகளும் கூட என் கண்ணில் விழுந்தன. ஒரு பெரிய லான்ட்-ஸ்கேப் படுதா என்அருகே இருப்பது போல் உணர்வு.

அன்று முதல் மலை என் இரண்டாம் காதலி அந்தப் பெண் என் முதல் காதலி.

என் நாட்கள் அங்சே பரவசமான எதிர் பார்ப்புக்களோடு சென்றது. நான் அந்தப் பெண்ணை முழுதுமாகப் பார்க்க விட்டாலும் அவள் எங்கேயோ இருக்கிறாள் என்ற நினைவு என்னை இன்ப மயமாகத் தொடர்ந்தது.

வீட்டில் அவள் எப்போதும் ஒரு இயக்கமாக விளங்கினாள். ஒரு சமயம் குரல் கூடத்தில் கேட்கும். பிறகு தொழுவத்தில் கேட்கும். பிறகு தோட்டத்தில் கேட்கும்.

வந்த ஒரு மாதத்துக்குப் பிறகுதான் அவள் பார்வையின் சின்னச் சின்னத் துணுக்குகள் என்மீது விழுந்தன. ஒவ்வொன்றும் ஒரு கவிதைச் சொட்டு. என் மனத்துள் அவை மின் கர்ப்பங்களாக நுழைந்தன. உள்ளே கிளை கிளைகளாக ஜொலித்து என் மனசை வெளிச்ச வெள்ளமாக மாற்றின.

ஸர்வே முடிந்து வந்த அந்த நாளை நான் மறக்க முடியாது.

காம்ப்பை விட்டு வீட்டுக்கு இளைப்பாகக் கிளம்பிக் கொண்டிருந்தேன். சூரியன் ஒரு சிவப்பு விளிம்பாக மலையில் இறங்கிக் கொண்டிருந்தான்!

என் சைக்கிள் ஒற்றையடித் தடத்தைப் பிடித்துப் போக வழியில் சின்னஞ் சிறிய பவித்ரா நதி! நீர் நிர்மலம்! குளித்தால் மலை மூலிகை!

அதைக் கடக்கும்போது ஒரு கொத்துச் சிரிப்பைக் கேட்டுச் சட்டென்று திரும்பினேன். என் கண்களில் தங்க மின்னல் அடித்தது. பத்துப் பதினைந்து பெண்கள் கோரஸாகச் சிரித்துக்கொண்டிருந்தார்கள்.

ஆளுக்கு ஒரு மாலை கொண்டு வந்திருந்தார்கள். பவித்ரா நதிக்குச் சூட்டினால் நல்ல கணவன் கிடைப்பானாம். அப்படி ஒரு நம்பிக்கை.



''அந்த நடிகை படு கவர்ச்சி''
''எப்படி?''
''தும்மினால்கூட இச், இச்,னு தான் தும்முவாங்க.''
—இளை அ. கதிர்வேல்

வட்ட வட்டங்களாக மாலைகள். ஒன்றுக்கொன்று ஜோடி சேர்ந்து இன்பமாக மிதந்தன.

நான் சைக்கிளைக் கடத்திக் கொண்டிருந்த நேரம் அது.

ஒரு பூமாலை என் காலைச் சுற்றித் தத்தளித்தது, மீண்டும் சிரிப்பு.

என் அடக்கத்தைத் தளர்த்தித் திரும்பினேன். கண்கள் அத்தனை பேர்களிலும் கவர்க்காவை எப்படிப் பிடித்தது என்று தெரியாது.

அதே நேரம் அவளும் என்னைப் பார்த்துக்கொண்டிருக்க, எனக்கு பரவசத் திலை!

விநாடி, யுகம், அனுதி!

அத்தனையிலும் ஒரு சுற்றுச் சுற்றிக் கீழே இறங்கினோம்.

அந்தக் கணத்தில் எங்கள் மனங்கள் கலந்தன என்று நினைத்தேன்.

உணர்வுகள் மெள்ள வர, சைக்கிளைப் பிடித்தேன். நகர்த்தினேன்.

அன்றிலிருந்து ஆர்வங்கள் கூடிப்போக தினந்தினமும் கவர்க்கா வாசல் தோட்டத்தில் இறங்கி வேலை செய்யும் பாவனையில் மேலே பார்த்தாள். நான் சன்னலை ஒட்டிக் கீழே பார்ப்பேன். இருவரும் மற்றவர் கண்ணில் பரவசமாக மெய்மறந்து வாசம் செய்வோம்.

**"ஸோ**ார் ரூம் வேணுமா?"

குரல் என்னைத் தொட்டுத் திருப்பியது. வேலி ஓரத்தில் ஒரு பொடியன் நின்று என்னை ஆச்சரிய விழிகளால் பார்த்தான்.

"வேணும்" என்றேன்.

வேலிக் கதவைத் திறந்து விட்டான். அந்த வீட்டை ஒரு கணம் பார்த்தேன். என் மனம் மீண்டும் இருபத்தைந்து வயது இளசாகியது. என் பழைய சன்னலும், மாடியும் என்னைப் பார்த்துக் குசலம் விசாரித்தன.

தோட்டத்தைப் பார்த்தேன். அத்தனையும் அநேகமாக இருந்தது. எங்கே அந்த ரோஜாக்கள்! அவை மட்டும் எங்கே?

---

**அங்கே மனைவி இங்கே சகோதரி**

ஜெய லலிதா திருப்புவனம் கிராமத்துக்குச் சென்றார். செல்லும் வழியில் எதிரில் சந்தித்த சில கிராமப் பெண்களிடம் "நான் யார் என்று தெரிகிறதா?" என்று கேட்டார். அந்தப் பெண்கள் "உங்களைத் தெரியவில்லை" என்றனர். ஒரே ஒரு பெண் மட்டும் "ஆங்...! நீங்கள் எம்.ஜி. ஆர். மனைவிதானே? நேற்று நீங்க நடித்த "ஒளி விளக்கு" படம் பார்த்தேன்" என்றார். உடனே ஜெய லலிதா, "படத்தில்தான் நான் அவரு மனைவி. உண்மை வாழ்க்கையில் அவருக்கு நான் சகோதரி" என்றார்.

சம்பவத்தை நேரில் பார்த்து எழுதியவர்: திசைமுத்து

---

பையனைப் பார்த்து, "உம் பேரென்ன?" என்றேன்.

"ரகுவீரா!"

"சந்திரநாத் பட் இருக்காரா?"

"உள்ளே இருக்கார்!" என்று அவன் சொன்னதும் என்னைத் தூக்கிவாரிப் போட்டது.

நிச்சயம் எதிர்பார்க்கவில்லை. அவர் இறந்திருப்பார் என்று நினைத்தேன்.

"கவாதி கவாதி" என்று பையன் அழைத்தான். "இதோ" என்று ஒருபெண்ணின்குரல். அதைத் தொடர்ந்து அவள் பின் கட்டிலிருந்து வர, அந்த உருவம் என்னை ஏன் மாய வைத்தது?

இளைற்றடியில் பார்த்த அதே பெண்தான். மெல்லிய ஒளிர்வுடன் வந்தாள். படபடப்புடன் பார்த்தேன். 'கவர்க்கா' என்று உள்ளே ஈனமாகக் கூவினேன். அவளேதான் அதே முகம்! அதே கண்கள், அதே முகவாய்! அதே உதடுகள்!

எனினும் எங்கேயோ நெருடல்! இவள் கவர்க்காவாக இருக்க முடியாது. அவள் முப்பதுகளில் இருப்பாள். இவள்....?

ஒருவேளை! சில பெண்கள் நித்திய இருபதுகளாகவே இருப்பார்களோ! அவர்களில் இவளும் ஒருத்தியா?

கவர்க்கா! என்னைச் சோதிக்கிறாயா?

"தினம் அஞ்சு ரூபாய் வாடகை!" என்று தலை நிமிராமல் சொன்னாள். பளிச்சென்று திரும்பினேன். அந்தக் குரல் எனக்கு இனம் தெரியும். அது அவள் குரல்தான்!

"வீரா! கொண்டு காட்டு!"

பழைய படிகளில் ஏறினேன். அதே மரப்படிகள்! என் காலடியில் அவைகளின் பரிச்சயம் இன்னும் ஒட்டியிருந்தது.

வீரா கதவைத் திறந்து விட்டான். என் பழைய மனைக்குள் போகும் உணர்ச்சி!

அன்றுஇரவில் உறக்கம் வரவில்லை. இருபத்தைந்து வயதின் ஏக்கங்களும் ஆர்வங்களும் அதே தரம் குறையாமல் எனக்குள் பொங்கி வந்தன.

புலம்பினேன். 'எனக்கு இன்னும் வயசாகவில்லை. அதே இருபத்தைந்தில்தான் இருக்கிறேன்' என்று இருட்டுக்குள் மெல்லிதாய்க் கத்தினேன். கடந்துபோன பதின்மூன்று ஆண்டுகளையும் களைந்து எறிய முற்பட்டேன்.

எனது தாபங்கள் உச்சத்தில் ஏற, மாடிக் கதவைத் திறந்து, படிகள் முன்னால் நின்று கீழே இருட்டை நோக்கி, "கவர்க்கா! நான் மேலேதான் இருக்கிறேன், வரமாட்டாயா?" என்று சத்தமில்லாமல் இரைந்தேன்.

(அடுத்த இதழில் முடியும்)

# விடிவதற்குள் வா!

## 6

ராசவல்லிபுரத்துக்குப் பஸ்விசாரித்துக்கொண்டு மெயின் ரோடுக்கு வந்து அரை மணி நேரம் காத்திருந்தான். நாகர்கோயில் பஸ் 'மினிட்டுக்கு மினிட்டு' போகிறது என்று சொன்னதெல்லாம் பொய். நாகர்கோயில் போகிற பாதையில்தான் இருக்கிறதாம். சிகரெட்டு பற்றவைத்துக் காத்திருந்தான். எதிரே மௌனமாக நுரைத்துக் கொண்டிருக்கும் சமுத்திரத்தைப் பார்த்தான். காலையில் பார்த்த நாய்வாய் லாரித் துண்டு அவனை மறுபடி அச்சுறுத்தியது. அந்த நினைவைத் தள்ளிப்போட விரும்பினாலும் திரும்பத் திரும்ப அது மேலுக்குத் தத்தளித்து வந்தது. இல்லை. அவள் உயிருடன்தான் இருக்கிறாள். ஒருவேளை ராசவல்லிபுரம் சாமி யாருடன் சேர்ந்து விட்டாளோ! இந்தமாதிரி விந்தைகள் எல்லாம் இப்போது நடக்கிறதே. அங்கே இல்லையென்றால் நாகர்கோயில் போய் ஒரு முறை நன்றாக விசாரித்துவிட்டு வர வேண்டும். அப்புறம்தான் மேற்கொண்டு எண்ணவே வேண்டும். அதுவரை எந்த முடிவுக்கும் வரக் கூடாது. கட்டாயமாக மனசை ஒருவழிப்படுத்தி விபரீத எண்ணங்களுக்கு இடம் கொடுக்காமல்... யாராவது வெட்டிப் புதைத்திருப்பார்களோ? சே!

பஸ் வந்தது. ஏறிக்கொண்டான். கூட்டம் அதிகமாக இருந்தது. விட்டத்து உயரம் போதவில்லை. அசுர வேகத்தில் அவனை உலுக்கிக்கொண்டே சென்றது. சன்னலுக்கு வெளியே ரோடின்



நீற்றல்தான் தெரிந்தது. பெண்கள் வரிசையில் ஒருத்தியின் பின்புறம் கிரிஜா போல இருந்தது.

''என்னை எதுக்குக் கல்யாணம் பண்ணிக்கிட்டீங்க?''

''ஏன் கிரிஜா! இது என்ன கேள்வி!''

''இல்லே, எல்லோரையும் போல இந்த நாட்டில உத்தியோகம் பார்க்கிறவங்களா இருந்தா சரி. வெளி நாட்டிலே இருந்துக்கிட்டு என்னையும் கூட்டிப் போகாம தனியா கிராமத்திலே கொண்டு விட்டு விட்டு எத்தினி நேரம் இந்தச் சாடைல பேசிக்கிட்டு இருப்பேன். அவங்களுக்குத் தமிழ் வரலே. எனக்கு மலையாளம் வரலே. அம்மாவோ இந்த விசக்கை ஆவுறதில்லேன்னு ரெண்டு மாதத்திலே ஊருக்குப் போயிட்டாங்க. உங்களுக்கும் அல்லல். எதுக்காகக் கல்யாணம் செஞ்சுக்கணும்? சம்பாதிச்சு முடிச்சுட்டுப் பெறவு வந்து கல்யாணம் பண்ணியிருக்கலாமில்லே?''

''உங்க அம்மா கிட்ட நிலவரம் சொல்லித்தானே கல்யாணம் செஞ்சுக்கிட்டேன். முத ரெண்டு மூணு வருசம் நீ அங்கே வர முடியாது. தனியாத்தான் இருக்கணும்னு. அதுக்குச் சம்மதப்பட்டுத்தானே நீங்க கட்டிக்கிட்டீங்க.''

''எங்கம்மாவுக்கு என்னங்க! ஆறில ஒண்ணு ஒழிஞ்சா சரின்னு கட்டிக்கொடுத்து அனுப்பிட்டாங்க. நீங்க செய்தது பச்சைத் துரோகம்! எங்க ஏழ்மையைப் பயன் படுத்திக்கிட்டீங்க. ஏழ்மை ஏழ்மை !எனக்கு



# சுஜாதா



எம்மைல இருந்து அனுத்துப் போச்சு. உங்களைக் கட்டிக்கிட்டதுக்குத் தங்கம் சேர்க்கப் போறேன். தங்கச்சிங்க பொடவையை மாத்தி மாத்திக் கட்டிக்கிட்டு அனுத்துப் போச்சு. புடவை சேர்க்கப் போறேன். கல்லு வளையலா சேர்க்கப் போறேன். இலவு காத்த கிளி மாதிரி காத்திருந்ததுக்கு ஏதாவது சுகம், சௌகரியம் வேணுமா?

''எனக்கு கவுனு பாவாடை எல்லாம் வாங்கிட்டு வாங்க. வீட்டுக்குள்ள போட்டு அழகு பார்த்துக்கறேன்! தங்கம் பாளம் பாளமா வாங்கிட்டு வாங்க. பவழம் வாங்கிட்டு வாங்க. வைரம் வாங்கிட்டு வாங்க. எனக்கு அது மேலதான் ஆசை!''

''ஏன் கிரிஜா என்மேல ஆசையில்லையா உனக்கு?''

''உங்களைச் சரியாவே தெரியாதே! கல்யாணத்துக்கு ஒரு வாரம் வந்திங்க. உடனே போயிட்டீங்க. அதும் பின்னால ஒரு வருசம் கழிச்சுத்தான் ஒங்களைப் பார்க்கறேன். லெட்டர் போடறீங்க. லெட்டர் போடறதும் நேரில பார்க்கறதும் ஒண்ணாயிடுமா? நாகர் கோவில்ல வெச்சு ஒரு முறை போன் பண்ணிங்க. காதில என்ன விழுந்ததுன்னு தெரியலே. இரைச்சல்...''

''இன்னும் ரெண்டு வருசம் கிரிஜா. காண்ட்ராக்ட் முடிஞ்சதும் பாரு. அப்புறம் நான் வேலைக்கே போக வேண்டாம். கஷ்டப் பட்டுச் சேர்த்து வெச்சதுக்குப் பலன் கிடைச்சுடும். ஒரு வழியா திரும்பி வந்து எப்பவும் உன் கிட்டவே இருப்பேன்.''

''அடுத்த தடவை வரப்ப....''

இதை வாங்கிட்டு வாங்க, அதை வாங்கிட்டு வாங்க! நகைகளின் மேல் என்னதான் மோகமோ! ஒவ்வொரு கடிதத்திலும் நகை! நகை!

எல்லா நகைகளையும் இப்போது எங்கே மாட்டிக் கொண்டு போயிருக்கிறாளோ? அல்லது நகைக்காக அவளை யாராவது....

சே, அப்படி எண்ணவே எண்ணாதே.

''அண்ணாச்சி யாரு ராசவல்லிபுரம் சொன்னது?''

இறங்கிக்கொண்டான். பஸ் அவனைப் புறக்கணித்து விட்டுச் செல்ல இரு மருங்கும்

# அருள் வாக்கு...



**சோ**ற்றுச் செலவை விட ஜாஸ்தி. யாரும் காப்பியை நிறுத்துவது; பட்டுத் துணி வேண்டாம் என்று விடுவது; ஸ்வயம்பாக நியமத்தால் (தன் சாப்பாட்டைத் தன் கையாலேயே சமைத்துச் சாப்பிடுவது என்ற நெறியால்) ஹோட்டல் செலவைஅடியோடு குறைப்பது; ஸினிமாவுக்குப் போவதை நிறுத்துவது என்ற இந்த நாலை மட்டும் செய்துவிட்டால் போதும், எவனும் கடன் கஷ்டப் படாமல் இருப்பதோடு, பிறத்தியாருக்கும் திரவிய ரூபத்தில் ஏதோ கொஞ்சமாவது உபகரிக்க முடியும். இதெல்லாம் ஒரு குடும்பத்தின் தினப்படி சமாசாரங்கள். இவற்றோடு ஸமூகப் பிரச்னையாகி விட்ட வரதக்ஷிணையையும் ஆடம்பரக் கல்யாணத்தையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். வரதக்ஷிணை இல்லை, கல்யாணத்துக்காக ஆயிரம் பதினாயிரம் என்று செலவழிப்பதில்லை என்றால் எந்தக் குடும்பத்திலும் பண முடை கடன் உபத்திரவம் ஏற்படவே ஏற்படாது. பொதுப் பணிகளுக்கு உதவ ஸம்ருத்தியாகக் கிடைக்கும்.

எது இன்றியமையாதது, எதெது இல்லாவிட்டாலும் வாழ்க்கை நடத்த முடியும், எதெதுகள் இல்லாமலும் நம் அப்பன், பாட்டனெல்லாம் சந்தோஷமாகவே வாழ்ந்தார்கள் என்று ஆலோசித்துப் பார்த்துத் தேவைகளைக் குறைத்துக் கொண்டு வாழ வேண்டும். முதலில் சிரமமாக இருக்கும். சபலங்கள் இழுத்துக் கொண்டுதான் இருக்கும். இருந்தாலும் தாயான அம்பாளைவேண்டிக்கொண்டுஅனுக்ரஹபலத்தில்தேறித் தெளிந்து ஜயிக்க வேண்டும். அப்புறம் தான் இந்த எளிய வாழ்க்கையில் எத்தனை நிம்மதி இருக்கிறதென்று தெரியும். போக்ய வஸ்துக்களைத் தேவை தேவை என்று சேர்த்துக் கொண்டே போனால் அப்புறம் வீடு பெரிசாகப் பார்க்க வேண்டியிருக்கிறது. அதனால் வாடகைச் செலவு ஏறுகிறது. இப்படி ஒன்றிலிருந்து ஒன்றாக நமக்கே வருமானம் போதாமல் ஆக்கிக்கொண்டால் பரோபகாரம் பண்ணி நம் கர்மாவைக் கழுவிக் கொள்வதெப்படி? அநாவசியங்களையெல்லாம் கழித்துக் கட்டிவிட்டால், நமக்கு நிம்மதியாகப் பிறருக்கும் உதவியாக ஜன்மாவை உயர்த்திக் கொள்ளலாம்.

அம்பாள் தாயாக, அந்த ஒரே தாயாருக்கு நாம் அத்தனை பேரும் குழந்தைகளாக—ஒரு குடும்பத்தில் பத்துக் குழந்தைகள் இருந்தால் அவை ஒட்டிக் கொண்டு இருக்கிற் போல்—ஒருத்தருக்கொருத்தர் உபகாரம் பண்ணிக்கொண்டு வாழலாம். இந்த உபகாரம்தான் என்று generalise பண்ண வேண்டியதில்லை. அவாளவாள் ஸ்திதியில் எது ஸாத்தியமோ அந்த உபகாரத்தைச் செய்து கொண்டு ஆனந்தமாக வாழலாம்.

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி
சந்திர சேகரேந்திர சரஸ்வதி
சங்கராசாரிய சுவாமிகள்

"துள்ளும் அவர்கள் ஆர்வத் திறமை
உள்ளம் நிறையும் உங்கள் பெருமை!"






Monde (உலக) தரத் தேர்வில்
'பாம்கீஸ்' உடன் கூடிய
தங்க மெடல் பெற்றது.
ஆம்ஸ்டர்டாம், 1981.

கட்டுக்கடங்கா ஆர்வத்துடிப்பு,
கனி துள்ளும் மோகம்—அதிலே
கண்டு கொள்ளுங்கள் மால்டோவா
குழந்தைகளை—வாழ்விலே
அவர்கள் தொட்டதெல்லாம்
வெற்றி, உற்சாக வேட்டை!

இன்சுவை ததும்பும் மால்டோவா—
புரதங்கள், வைட்டமின்கள்,
உலோக தாதுக்கள் நிறைந்தது—
பருகும் உங்கள் குழந்தைகளுக்கு
மட்டற்ற ஆர்வத் துடிப்பு, சிட்டுப்
போல் சுறுசுறுப்பு!

அப்புவுடன் இணைந்தபின் இவ
களது சுறுசுறுப்புக்கு எல்லையும்
உண்டோ!!



வைட்டமின்கள் கூடிய

# மால்டோவா

ஆரோக்கியம் பலம் மற்றும் சக்திக்கு

எசியாட் ஆரோக்கிய
பானம்

JIL ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்

# முத்தான 3 வாய்ப்புகள்!

செப்டம்பர்

10
வெள்ளி
வரிசை : ஜேஎஸ், ஜேடி
வெளியிடும் நாள் :
30.8.82

20
திங்கள்
வரிசை : ஜேயு, ஜேவி
வெளியிடும் நாள் :
10.9.82

30
வியாழன்
வரிசை: ஜேடபிள்யூ, ஜேஎக்ஸ்
வெளியிடும் நாள் :
20.9.82

முக்கனி, முப்பால், முத்தமிழ்,
இதன் வரிசையிலே இனி மற்றுமோர் முத்திரை!

## தமிழ்நாடு அரசு பரிசு சீட்டு

மாதம் மும்முறை
10, 20, 30 தேதிகளில் வழங்கும் முத்தான வாய்ப்பு!

இரண்டு முதல் பரிசுகள் ரூ. 100000 வீதம்

*மற்றும் ஏராளமான பரிசுகள்!*
*தாராளமான வாய்ப்புகள்!!*
*விரைந்திடுவீர்! வாங்கிடுவீர்!! வென்றிடுவீர்!!!*

இயக்குநர், தமிழ்நாடு பரிசு சீட்டு திட்டம்
அரசினர் தோட்டம், சென்னை-600 002.



## முதல்வரின் சத்துணவுத்திட்ட நிதிக்கு உங்கள் காணிக்கையை அனுப்பி விட்டீர்களா?

''முதல்வரின் சத்துணவுத் திட்டக் கணக்கு'' என்று குறிப்பிட்டு உங்கள் நன்கொடையை ''நிர்வாகி, கல்கி - மங்கையர் மலர், சென்னை-32'' என்ற விலாசத்துக்கு அனுப்பவும்.

---

நரிசலாக ரோடு நீண்டு கொண்டே போக, எங்கே அந்த ராசவல்லிபுரம்? எந்தத் திசையில் நடப்பது என்று கூடத் தெரியவில்லை. தீர்மானிக்காமல் மரத்தடியில் காத்திருந்தான். ஒரு கட்டை வண்டி அவனை வந்து சேர,

''ராசவல்லிபுரமா? தெக்கால போங்க.''

''எதுப்பா தெற்கு?''

''இப்படியே நேராப் போனீங்கன்னு மைல் கல்லு இருக்கும். எழுதியிருக்கும்!''

தார் சாலையை விட்டு விலகி வண்டிச் சக்கரத்தின் தடம் ஆழப் பதிந்துள்ள மண் பாதையில் நடப்பதே சிரமமாக இருந்தது.

''இந்தப் பாதையிலா போயிருப்பான்? நடந்தா? இல்லே யாராவது கடத்திக் கொண்டு... மறுபடி அந்த எண்ணங்கள்! இரு மருங்கும் ஆங்காங்கே கிணற்றுப் பாசன முயற்சியில் பச்சை தெரிந்தது. தென்னை தான் தாராளமாகச் சூழ்ந்திருந்தது. எதிரே சந்தித்த கிராம வாசிகள் இவனை நின்று ஆச்சரியத்துடன் பார்த்தார்கள். கொஞ்ச தூரம் போனதும் கோபுரம் தெரிந்தது. நம்பிக்கை வந்தது! கோபுரத்தின் அருகில் சிதிலமாகிப் போன மரத் தேர்கள் இரண்டு நின்று கொண்டிருந்தன. அவைகளின் சக்கரங்கள் இடுப்பு வரை மண்ணில் புதைந்திருந்தன. தகரச் சட்டை பழுது பட்டிருந்தது. எதிரே குளத்தில் பாசி படிந்து கணுக்கால் ஆழ ஜலம் தத்தளித்துக் கொண்டிருந்தது. மிக நீண்ட தாழ்வாரம் கொண்ட ஒரு வீடுமட்டும் புதுசாக இருந்தது.

''யார் வேணும்?''

''சாமியைப் பார்க்கணும்.''

''நீங்க எந்த ஊர்க்காரங்க?''

''பக்கத்திலே மணக்காட்டிலே இருந்து வர்றேன்.''

''அப்படிங்களா? சுவாமி நிஷ்டையிலே இருக்காரே.''

''காத்திருக்கேங்க.''

''என்ன விஷயமாப் பார்க்கணும்?''

''காணாமப் போன ஆளைப் பத்தி விசாரிக்கணும்.''

''அதெல்லாம் அவரு சொல்ல மாட்டாருங்களே?''

''அவரைச் சந்திக்க முடியுமில்லியா?''

''தாராளமா. நாலரை மணிக்கு.''

''சரிங்க. காத்திருக்கேன்'' என்றான்.

திண்ணையில் உட்கார்ந்தான். மாடு கட்டியிருந்தது. திண்ணையில் ஐம்பது பேர் தாராளமாகப் படுக்கலாம் போல இருந்தது. சார்ப்பு தாழ்வாகப் போட்டு வெயிலுக்கு இதமாக இருந்தது. எதிரே பற்பல சுவாமிகளின் போட்டோக்கள் குங்குமமிட்டு மாட்டியிருந்தது. பிரமுகர் விஜயங்கள். ஆதீனத்தைச் சேர்ந்தவர்களின் க்ரூப் போட்டோ. எல்லாவற்றிலும் சுவாமிகள் எளிமையாக, இடுப்பில் காவி வஸ்திரம் மட்டும் அணிந்து மொட்டை அடித்திருந்தது தெரிந்தது. பட்டுத்துணியில் தங்க எழுத்துக்கள் முன்னாள் சுவாமிக்கு 'இருபதெண் சீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

''பேர்மிகு விரோதிகிருதுவை காசி பேணி ருபத்திறெடேழில் பெறுறும்வெள்ளிவாரமும் வளரும் பிறைநிரயோதசி திதியும்....'' என்றெல்லாம் 'நீட்டமாக பாடல்' எழுதியிருந்தது. உள்ளே மேசை போட்டு காரியஸ்தர் கணக்கெழுதிக் கொண்டிருந்தவர் அடிக்கடி கண்ணாடிக்கு மேலே அவனைப் பார்த்துக் கொண்டிருந்தார். கிராமம். இந்த மடம் ஒன்றுதான் பெரிய இடம் போல.

கனகசபை தன் கை ரேகைகளை ஸ்வாரஸ்யமில்லாமல் பார்த்துக் கொண்டு காத்திருந்தான். உள்ளே திருவாசகம் ஒலித்தது. அது நின்றுபோனதும் காரியஸ்தர் கட்டைப் பேனா எழுதும் சப்தம் கூடக் கேட்டது. சிகரெட் குடித்தால் கோபித்துக் கொள்வார்கள் என்று வெளியே போய் வாய்க்கால் அருகில் போய்ப் பிடித்து விட்டு முகம் துடைத்துக் கொண்டு வந்தான். எதை எதிர் பார்த்து வந்திருக்கிறான்? சுவாமி எனக்கு அப்படி யாரையும் தெரியாது என்று சொல்லி விட்டால்? புரியவில்லை. என்ன செய்வான்? அந்தக் கடிதத்தைக் கொண்டு வந்திருக்கிறான். பைக்குள்ளேயே வைத்திருக்கிறான். காட்டலாமா? வேண்டாம். சுவாமி மேல் தான் சந்தேகப்படவில்லை. தகவல் தேடித் தான் வந்திருக்கிறான்.

திரும்பப் போனபோது — சுவாமி உங்களுக்காகக் காத்திருக்கார் — செருப்பைக் கழற்றிவைத்துவிட்டுஉள்ளேபோனான். இடது பக்கத்து அறையில் ஒரு ராலி ஃபேன் மௌனமாகத் தலையாட்டிக் கொண்டிருக்க, சுவாமி நாத தம்பிரான் ஒரு மேஜை அருகே உட்கார்ந்திருந்தார். அவனை நேரே துளைக்கும் கண்களால் பார்த்தார். அவருக்கு முப்பத்தைந்து வயதுதான் இருக்கும். முழுவதும் மொட்டையடித்துத் தலையில் பச்சையாக இருந்தார். கைகளைக் கட்டிக்கொண்டு மேசை மேல் வைத்துக் கொண்டு கணக்குப் புஸ்தகத்தை ஒதுக்கிவிட்டு, ''என்ன வேணும் உங்களுக்கு?'' என்றார்

கனகசபைக்கு அவரைவணங்க வேண்டுமா என்பது சந்தேகமாக இருந்தது. அரை மனதாகக் கை கூப்பி ''சுவாமி நான் மணக்காட்டில இருந்து வர்றன். உங்க கிட்ட என் மனைவியைப் பத்தி ஒரு விஷயம் கேக்கணும்னு வந்தேன்!'' என்றார்.

''கிரிஜா தானே?'' என்றார். (தொடரும்)



✠ திருமதி டி. ஏன்ஜல்மேரி, கோவில்பட்டி

? பீகார் பத்திரிகை கட்டுப்பாடு மசோதா பற்றி மத்தியஅரசு ஏன் வாய் மூடியுள்ளது?

! நான் அப்படி எண்ணவில்லை. கறுப்புச் சட்டத்தை எதிர்த்து அமைதி ஊர்வலம் நடத்திய பத்திரிகையாளர் மீது தடியடிப் பிரயோகத்தை நியாயப்படுத்த முயலும் பீகார் முதல்வர் மிச்ரா நீண்ட காலம் பதவியில் நீடிக்கப் பிரதமர் விடமாட்டார் என்றே கருதுகிறேன். பார்க்கலாம்.

✠ கே. எஸ். சுப்பிரமணி, சென்னை-1

? கலைஞரின் பேரன் பேத்திகளும் அன்பழகன் மனோகரன் மற்றும் தமிழக அமைச்சர்களின் குழந்தைகள் எல்லாம் இங்கிலீஷ் மீடியத்தில் படிக்கிறார்களாமே? மொழிப்பிரிவில் ஹிந்தி கற்கிறார்களாமே? இந்த நிலையில் 'ஹிந்தியை ஒழிப்போம் என்றும்' 'தமிழை வளர்ப்போம்' என்றும் பேசுகிறார்களே? எனக்கு ஒன்றுமே புரியவில்லையே? உங்களுக்கு?

தொடர்பு மொழி ஆங்கிலம் என்று இவர்கள் கூறுவதால் ஆங்கில மீடியம் அத்தனை ஆட்சேபகரமாகத் தோன்றவில்லை. ஆனால் ஹிந்தி விஷயம் உண்மையானால் காரியவாதிகளும் ஊருக்கு உபதேசிப்பவர்களும் இப்படித்தான் நடந்துகொள்வார்கள் என்று புரிந்து கொள்ள வேண்டியதுதான்.

✠ பி. ஆர். பார்த்தசாரதி, மன்னார்குடி

? விமானக் கடத்தல்காரனைச் சுட்டுக்கொன்றது நல்ல முன்னுதாரணம்தானே?

! ஸாரி, நான் அப்படி நினைக்கவில்லை. விமானத்தைச் சுத்தப்படுத்தும் தொழிலாளர்கள் போல் விமானத்தினுள் நுழைந்த இரு போலீஸ்காரர்கள், இன்னும் சற்று சாமர்த்தியமாகச் செயல்பட அனுமதிக்கப்பட்டிருந்தால் உயிர்ப் பலி இருந்திருக்காது. நீதிபதி முன் அவனை நிறுத்தியிருக்கலாம்.



✠ வி. சுவாமிநாதன், மருதூர் ★

? குடும்பத்தில் ஏற்படும் கலவரத்துக்கும் கட்சியில் ஏற்படும் கலவரத்துக்கும் உள்ள வித்தியாசம் என்ன?

! குடும்பக் கலவரம் அந்தக் குடும்பத்தை மட்டும் பாதிக்கும். கட்சிக் கலவரம் நாட்டையே பாதிக்கும். கட்சியின் உட்பூசலை நாம் விமர்சித்தால், 'இது எங்கள் குடும்பப் பிரச்னை; உம்மை யார் கேட்டது' என்பார்கள். இது தவறான வாதம். கட்சி நாட்டை ஆள்கிறது அல்லது எதிர்க் கட்சியாக இருந்து ஆட்சியை விமர்சிக்கிறது என்பதை நினைவில் கொண்டு கட்சியின் நடவடிக்கைகளையும் மக்கள் கவனித்து அதன் ஆரோக்கியத்தைக் கணிக்கத்தான் வேண்டும்.

✠ எஸ். எல். பி. குமார், பெங்களூர்

? வொஹி மார்கெட் 'டல்' அடிக்கக் காரணம்?

! 'டால்' அடிக்கும் கதாபாத்திரங்கள் அவருக்குத் தரப்படாததுதான்.

✠ மா. வடிவேல், சிதம்பரம்

? மூன்றாம் பிறை கமல், சகலகலா வல்லவன் கமல் — ஒப்பிடுக.

! முதல் கமல் — பூரண சந்திரன். இரண்டாவது கமல் — செயற்கைச் சந்திரன்.

✠ வி. தேவராஜ, தேவராயபுரம்,

? சமீபத்தில் வெளியான புது புத்தகங்களில் தங்களைக் கவர்ந்தன எவை?

! உங்கள் 'டேஸ்ட்' எப்படியோ தெரியாது. இருப்பினும் பின் வருவனவற்றை சிபாரிசு செய்கிறேன். (1) உன்னை நீ அறிந்து கொள்வது எப்படி? சுவாமி சச்சிதானந்தா கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம், வேதாரண்யம் 614810. விலை ரூ. 20, (2) பொதுமக்களுக்கான சட்ட விளக்கங்கள், எம். பி. சுப்பிரமணியன், ஸ்ரீ காந்திமதி நூலகம், 5-24-பி, அம்மன்



கோவில் காலனி, பொன்னம்பலம் சாலை, சென்னை-78 விலை ரூ. 7. (3) சர்வாதிகாரி இடி அமீன், பிரபு சங்கர், மருதமலையான் பதிப்பகம், 33, பொன்னுசாமி நாயக்கன் தெரு, சென்னை-14. விலை ரூ. 24

✕ கல்கத்தா மிக்கி, கல்கத்தா

? பெரிகுளம் தேர்தல் யாருக்கு மிகவும் உதவும்?

! இ. காங்கிரஸ் போட்டி யிட்டாலும் தி. மு. க. போட்டியிடும் என்று கருணாநிதி அறிவித்திருப்பதைப் பார்த்தால் ஒரு திரும்பு முனையாக இத் தேர்தல் அமையலாம் என்று தோன்றுகிறது. தமிழக அரசியலில் திசை திருப்பம் ஏற்பட்டால் மக்களுக்கே முதல் நன்மை.

✕ ஆர். கண்ணன், விளாத்திகுளம்

? தன் பலம், பலவீனம் இவை இரண்டையும் எப்படி சார் கண்டுபிடிப்பது?

! முன்னுதாரணங்களால்: முதல் தடவை ஆர்த்தி எடுக்கப்பட்டபோது அமைச்சர் தந்த ஒரு ரூபாய் நாணயத்தைத் தட்டில் போட்டார் சென்னை வந்திருந்த ஜெயில் சிங். அடுத்த முறை ஆரத்திக்கு ரூபாய் நாணயம் தேடியது பலம். ரூபாய் நாணயம் அகப்படாதபோது 100 ரூபாய் நோட்டைப் போட்டது பலவீனம். தாம் செலவு செய்வது மக்களின் வரிப் பணம் என்பதை மறந்தது ரொம்ப ரொம்பப் பலவீனம்.

✕ பூவை சந்திரன், பாண்டமங்கலம்

? மறந்துவிடவேண்டியது எது? மறக்கவே கூடாதது எது?

! பம்பாயில் ஜீப் தயாரிக்கும் நிறுவனம் ஒன்று, நியூார்க் டைம்ஸ் பத்திரிகையில் நமது பிரதமரின் அமெரிக்க விஜயத்தை யொட்டி இரண்டு லட்சம் ரூபாய் செலவில் விளம்பரம் செய்ததை நாம் மறந்துவிட வேண்டும் என்று சம்பந்தப்பட்டவர்கள் எதிர்பார்க்கலாம். ஆனால் இவ் விளம்பரத்துக்கு அந்நியச் செலாவணி அனுமதிக்க ரிசர்வ்பாங்க் சம்மதித்ததா, இதற்கு விதி முறைகளில் இடம் இருக்கிறதா, இப்படிப் பணம் விரயமாவதைப் பிரதமர் விரும்புகிறாரா என்பனவற்றை மக்கள் மறக்காமல் சிந்திக்க வேண்டும்.




✕ அ. கஸ்குல் ஜமால், திருமங்கலக்குடி

? தங்கள் முன் திடீரென்று கடவுள் தோன்றினால் என்ன வரம் கேட்பீர்கள்?

! கோவில் சொத்து ஏழைகளுக்கு உணவிடப் பயன்படுவது நல்லதே. ஆனால் 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' எனில் சத்துணவுத் திட்டத்துக்குக் கோயில்கள் மட்டும் 50 லட்சம் தருமாறு நிர்ப்பந்தப் படுத்தப்படுவானேன்? எனவே, ''ஜாக்கிரதையாய் இரு: உன்னை நீயே காத்துக் கொள்'' என்று வரம் வேண்டுவேன்.

★ ரு 10 பரிசு பெறுபவர்


வி. சுவாமிநாதன்,
மருதூர்,
கருவாழக்கரை போஸ்டு,
(வழி) சீர்காழி, 609 304.


# நீங்கள் கேட்டவை

## துராசு



# 'இண்டர்வியூ'

வேலையில் அமர்வதே ஒரு பெரிய வேலை. எனினும் கடைசியாகச் செல்லும் 'இண்டர்வியூ'—வருங்கால வாழ்க்கைப் பாதையை அமைக்கிறது. அது எப்படி அமைந்தது என இந்தியன் ஓவர்ஸீஸ் வங்கியின் நேரு பூங்கா கிளை மானேஜர் திரு கண்ணனைக் கேட்டபோது....

''1957... நான் இண்டர்மீடியட் பாஸ் செய்த ஆண்டு. என் பெயருக்குப் பின்னால் பி.ஏ.' என்ற இரண்டு எழுத்துக்களைப் பார்க்க வேண்டும் என்பது என் அன்னையின் ஆசை. ஏதோ ஒரு அலுவலகத்தின் நாற்காலியில் என்னை அமர்த்த வேண்டும் என்பது என் தந்தையின் ஆசை. ஆனால் மேற்கொண்டு படிக்காமலும் — வேலைக்குச் செல்லாமலும் எப்போதும் கிரிக்கெட் விளையாடி — விளையாட்டு வீரனாக வேண்டுமென்பது என் விருப்பம். 'படிப்பா — வேலையா — கிரிக்கெட்டா' என முச்சந்திப்பில் நிற்கிறபோது முடிவில் என் தந்தையின் விருப்பத்திற்கேற்ப — வேலை தேடிப் புறப்பட்டேன். படிக்கும்போதே தட்டச்சும், சுருக்கெழுத்தும் நான் பயின்றதால் 'தட்டச்சர்' வேலை தேடி அலைந்தேன். வேலை தேடி முதலில் நான் தட்டியது டி. வி. எஸ். கதவுகளை. இன்று போய் அடுத்த வாரம் வா என்றார்கள். அதற்குப் பிறகு சில மாதங்கள் ஒரு வக்கீலிடம் வேலை. அதைத் தொடர்ந்து சில நேர்முகத் தேர்வுகள் கடைசியாக — ஏழாவது முயற்சியாக ஐ.ஓ.பி. யிலிருந்து அழைப்பு வந்தது.

என் வீட்டிலிருந்து ஐ. ஓ. பி. தலைமையகத்துக்குப் பஸ் கட்டணம் பதினைந்து காசுதான். எனினும் என் தந்தை 'சைக்கிளில் போய்வா' என அனுப்ப சைக்கிளை எடுத்துக் கொண்டு புறப்பட்டேன். 'பேரலல் டைப்' பேண்ட் அன்றைய நாகரிகச் சின்னம். எனவே அத்தகைய 'பேண்ட்' ஒன்றை அணிந்து கொண்டேன். 'ஸ்லாக்' ஷர்ட் அப்போதுதான் அறிமுகமாகியிருந்தது. எனினும் ஸ்லாக் அணிவது கௌரவக் குறைச்சல் என்பதால் இடது பக்கம் பாக்கெட் கொண்ட முழுக்கை ஷர்ட். இடையில் சின்னதாக ஒரு பெல்ட்... இந்த உடையில் தான் நான் இண்டர்வியூவுக்குச் சென்றேன். ஒரு அச்சடித்த புத்தகத்தைக் கொடுத்து அதில் ஒரு பாராவை டைப் செய்யச் சொன்னார்கள். செய்தேன். அரை மணி நேரம் கழித்து வா என்றார்கள். வயிறு பசித்தது. காண்டீனுக்குச் சென்று கையிலிருந்த இருபத்தைந்து காசைக் கொண்டு மூன்று இட்லியும் ஒரு டீயும் சாப்பிட்டேன். காண்டீனிலிருந்து திரும்பி வந்தபோது 'டைப்பிஸ்ட்'டுக்கான 'அப்பாயிண்ட்மெண்ட் ஆர்டர்' காத்துக்கொண்டிருந்தது.....''

''சிபாரிசு எதுவும் இல்லாமலா?''

''சிபாரிசு வியாதி பரவியது 1970க்குப் பிறகுதான். அதற்கு முன்பு நம் சான்றிதழ்கள் தான் நமக்கான சிபாரிசுக் கடிதங்கள்.''

''முதன் முதலில் உங்களுக்குச் சம்பளம்?''

''134 ரூபாய் மட்டுமே... ஆனால் இன்று ஒரு தட்டச்சர் 800 ரூபாய் வாங்குகிறார்.''

''அன்றைய கடைசி இண்டர்வியூவை இப்போது நீங்கள் நினைப்பதுண்டா?''

''உண்டு... வெறும் தட்டச்சராக என்னை அன்று நுழைத்த இண்டர்வியூ இப்போது மானேஜர் நிலைக்கு உயர்த்தியிருப்பதை அடிக்கடி எண்ணிப் பார்த்துக் கொள்வதுண்டு.''

ஏழு முறை 'இண்டர்வியூ' சென்ற கண்ணன் இன்று தம் வங்கியில் சிறுதொழில் கடன்பெற வருபவர்களைத் தினமும் 'இண்டர்வியூ' செய்து கொண்டிருக்கிறார். அண்மையில் இவரை நெகிழ வைத்த நிகழ்ச்சி...

சலவைத் தொழிலாளி ஒருவர் வங்கியில் கடன் கேட்டு விண்ணப்பம் அனுப்பியிருக்க அத்தொழிலருக்கு 'ஷ்யூரிட்டி' கொடுத்திருந்தவர் யுனைடெட் இந்தியா இன்சூரன்ஸ் கம்பெனியின் துணை மானேஜர். ''கடனை தொழிலாளி திருப்பிக்கட்டாவிட்டால் உங்களுக்குக் கஷ்டமே'' என கண்ணன் கூறியபோது—துணை மானேஜர்....

''இந்தத் தொழிலாளியை நான் நம்புகிறேன். ஏனெனில் சலவைக்கு நான் அனுப்பிய 'பாண்ட்' பாக்கெட்டில் நான் மறந்துவிட்ட ஐநூறு ரூபாயை அப்படியே திருப்பித் தந்தவர் இவர்...''

நேர்மை சாகவில்லை... சாவதில்லை!

—ஏ. வி. எம். கணேஷ்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431643)
Assistant Editor: P.S. Mani Layout Artist: Nambi Editor: K. Rajendran

# அமிர்தாஞ்சன் அறியும் தலைவலியின் கடுமையை

தலைவலி என்றாலே தாங்க முடியாத வேதனைதான். அதைப்போக்க சுலபமான வழி, அமிர்தாஞ்சன். சிறிதளவு அமிர்தாஞ்சன் எடுத்து நன்றாக அழுத்தித் தேயுங்கள். தலைவலியிலிருந்து இதமான உடனடி நிவாரணம் கிடைக்கும்.

அமிர்தாஞ்சன் மற்ற மருந்துகளைப் போலல்ல. அமிர்தாஞ்சனில் உள்ள சக்திமிக்க 10 மருந்துப் பொருட்கள் உடனடியாக செயல்புரிந்து வலியிலிருந்து உங்களுக்கு துரிதமாக நிவாரணம் அளிக்கின்றன. தீங்கு செய்யும் பின் விளைவுகள் எதுவுமில்லை.

85 ஆண்டுகளுக்கும் மேலாக புகழ்வாய்ந்த அமிர்தாஞ்சன் உடல்வலி, சுளுக்கு, ஜலதோஷம் மற்றும் தொண்டைப்புண் இவற்றிலிருந்தும் சிறந்த நிவாரணம் அளிக்கிறது.

எப்பொழுதும் அமிர்தாஞ்சன் உங்கள் கைவசம் இருக்கட்டும். ஏனெனில், அது எப்போது தேவைப்படுமென்று சொல்ல முடியாது.




**அமிர்தாஞ்சன்**

துரித நிவாரணம் உறுதியுடன் அளிப்பது. தீய பின்விளைவுகள் இல்லாதது.

OBM 7652TM

REGISTERED No. M. 4303
Registered as a Newspaper in Sri Lanka

# இப்போது! இந்தியாவிலே!
# சிகப்பழகு தரும் உலகுபுகழ்க் கண்டுபிடிப்பு!
# கிளியர்·டோன்



சருமத் தெளிவுடன் சிகப்பழகு தரும் ஒரு சிறப்புப் பொருள் அடங்கியது.

கதிரொளி பட்டுக் கறுக்காமல் தடுக்கும் வெய்யில் மறிப்பு சாதனம் உள்ளடக்கம்.

மாசுமறு நீக்கும் விஞ்ஞான அமைப்பிலக்கணம் (ஃபார்முலா)

சரும செழிப்புக்கான ஈரவளப்பச் சத்து இதில் மிகுதி

## பரிபூரண சிகப்பழகு சாதன க்ரீம்

கனவு பலித்தது! பொன்வண்ணம் மேனிமீது பூக்க— செவ்வழகு செழிக்க, இதோ **கிளியர்-டோன்** — பாரெங்கும் பல கோடி அழகு மாந்தர் பல நாட்டினர் வேளாவேளை பயன்படுத்தும் சிகப்பழகு க்ரீம்.

**கிளியர்-டோன்** — பன்னாட்டுலக மருந்தாராய்ச்சிப் பயனும்—விஞ்ஞான ஆக்கமுறைச் சிகப்பழகு க்ரீம்— இதனை இப்போது உங்களிடம் கொணருவோர் நிகோலஸ் லெபாரடரீஸ் இந்தியா லிமிடெட்.

சருமத் தெளிவுடன் சிகப்பழகு மலரவைக்க கிளியர்டோன் க்ரீமில் இருப்பதென்ன— இந்தியாவில் கிடைக்கின்ற வேறெந்த க்ரீமிலும் இல்லாத ஒரு சிறப்புப் பொருள்; பலநாட்டுலகிலும் ஏற்புப் பெற்ற ஃபார்முலா.

இயற்கையோடு இயற்கையாய்ச் செயல்படும் **கிளியர்-டோன்** அழகு 'சேப்பாக்குது' உங்கள மேனியை, நீக்குது மாசுமறுக்களை, க்ரீம் இதன் விஞ்ஞான அமைப்பிலக்கணமே.

சூரிய ஒளியிலுள்ள கேடான அல்ட்ரா — வயலெட் கதிர்களை உடம்பின் மேல் பட விடாமல் தடுத்துக் காத்திடுகிறது மேனி கறுக்கா வண்ணம். அதோடல்ல, உங்கள் சருமத்திற்குத் தேவைப்படும் மழமழ ஈரத் தன்மையை வரவழைக்குது **கிளியர்-டோன்**. பாரீர் வண்ணமாறுதல்— வேளை தவறாமல் 6 வாரம் **கிளியர்-டோன்** உபயோகிக்கும் பலன்கள் ஓகோ பார்த்துப் பூரித்தே போவீர்கள்!

பலநாட்டுலகிலும் புகழ்பெற்றது



புதிது



Clear·tone
the perfect fairness cream
Makes you fairer, keeps you fairer, naturally.
LONDON - PARIS - NEW YORK

உயரிய ஃபார்முலா, ஒப்பில சக்தி

**சிகப்பழகு ரகசியம்— இயற்கையாய் உமக்கே.** கிளியர்·டோன்
லண்டன் • பாரிஸ் • நியூயார்க்.

daCunha/NICL/3/81-TM